# தர்மசக்கரம்





காளயுக்தி ஹூ ஆடி மீ சக்கரம் 27 ஆரம் 7

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை - 639 115 திருச்சி ஜில்லா

# ஞானயக்ஞம்

தர்மசக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. சுமார் பத்தாயிரம் பிரதிகள் அச்சாகின்றன. இதற்கு ஆண்டுச் சந்தா ரூ. 10. இதைச் செலுத்த இயலாதவர்களுக்கு ரூ. 5. இதையும் செலுத்த இயலாத அருள்நாட்ட முடையோர் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களும் தர்மசக்கரத்தைப் படித்து ஆன்மீக வாழ்க்கையில் ஈடுபட சந்தர்ப்பமளிக்கவேண்டும். இதற்கு உதவிபுரிவது ஒருவித ஞானயக்ஞமாகிறது.

தமிழ்நாட்டில் பொதுமக்களின் நன்மைக்காக அரசாங்கம் ஆங்காங்கு நூலகங்களை நிறுவியுள்ளது. கிராமப்பகுதிகளிலும் இவை அமைந்துள்ளன. தனி இயக்குநரின் நிர்வாகத்தில் இப்பொழுது 1455 நூலகங்கள் இயங்குகின்றன. இவைகளில் 3742 பேர் பணியாற்றுகின்றனர். ஆண்டுதோறும் நூலகங்களுக்காகத் தமிழக அரசு சுமார் இரண்டு கோடி ரூபாய் செலவு செய்கிறது. நாள் ஒன்றுக்கு சுமார் 7 மணி அவகாசம் நூலகங்களைத் திறந்துவைத்து மக்கள் வசதியாக உட்கார்ந்து படிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பெற்றுள்ளன. செவ்வாய்க்கிழமைமட்டும் விடுமுறை. மற்ற கிழமைகளில் முறையே இயங்கும். அரசாங்கம் நேரடியாக நடத்தும் நூலகங்களைத் தவிர அரசாங்கத்திடம் மானியம் பெறும் நூலகங்களும் இருக்கின்றன. இவை யாவற்றிலும் தர்மசக்கரம் இடம்பெறுமானால் அருள்நாட்டம் உடையவர் பலர் படித்துப் பயன்பெறுவார்கள். அதற்கு ஆவன செய்யப்படும். பொருளுதவி கிடைக்குமளவுக்கு இத்திட்டத்தைக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் உள்ள நூலகங்களுக்கு விஸ்தரித்து ஆசிரியர்களும் மாணவர்களும் பயன்பெறச் செய்யலாம்.

இந்த ஞானயக்ஞத்தில் பங்குபெற விரும்புவோர் கீழ்க்கண்டவாறு இரண்டு விதங்களில் உதவிபுரியலாம்.

**1. வாசகசாலை நிதி — Library Fund**

வாசகசாலைகளுக்கு இலவசமாகப் பத்திரிகை அனுப்புதற்கு நிதி ஒன்று ஏற்படுத்துகிறோம். தங்களுக்கு விருப்பமான தொகையை இதற்கு நன்கொடையாக அளிக்கலாம். ரூ. 250க்கு மேற்பட்ட நன்கொடைக்கு வருமான வரி இலாகாவின் 80 G பிரிவுப்படி வரி விலக்கு உண்டு. இந்நிதியில் சேரும் தொகையைப் பாங்கில் டிபாஸிட் செய்யப்பெறும். அதனின்று கிடைக்கும் வட்டியைக்கொண்டு அரசாங்க வாசகசாலைகளுக்கு தர்மசக்கரப் பத்திரிகை முறையே இலவசமாக அனுப்பிவைக்கப்பெறும்.

[ அட்டை நான்காம் பக்கம் பார்க்க ]

ACC NO. 38674.
83-2

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | காளயுக்தி ஹூ ஆடி மீ | ஆரம் 7 |
|---|---|---|

பொருளடக்கம் — பக்கம்

1. பிரார்த்தனை 241
2. அருள் விருந்து 242
3. பரமஹம்சர் புகட்டிய பெருநெறி விளக்கம் 243
4. பராபரக் கண்ணி 246
5. பரபோதம் 248
6. தியானம் 250
7. துறவு 253
8. ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-119 257
9. ஸத் ஸம்பாஷணை 260
10. அறப்பணி எது? — சுவாமி ஸதானந்தர் 262
11. வாசுதேவமனன விளக்கம் — சுவாமி ஸதானந்தர் 265
12. சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள் (வித்துவான் ஆதி. பாலசுந்தரன்) 269
13. உண்மையான வைஷ்ணவன்யார்? — சுவாமி துருவானந்தர் 272
14. கர்நாடக யாத்திரை — சுவாமி சாந்தானந்தர் 274
15. குறிப்புகள் 276
16. செய்திகள் 280

### சந்தா விவரம்

**1. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகைவேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**2. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**3. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்துச் செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# அந்தர்யோக விவரங்கள்

**திருநெல்வேலி ஜில்லா—பாபநாசத்தில் 21, 22, 23—7—78 வெள்ளி, சனி, ஞாயிறு**

**இடம்:** பாபநாசம்
**நேரம்:** மூன்று நாட்கள்
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்
**இதர விபரம்:** ஆனி மாதம் தர்ம சக்கரம் அட்டையின் நாலாம் பக்கம் பார்த்துத் தெரிந்துகொள்ளவும்.

**கோவை ஜில்லா—வையம்பாளையத்தில் 23—7—78 ஞாயிற்றுக்கிழமை**

**இடம்:** சுதந்திரம் உயர்நிலைப்பள்ளி
**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 23—7—78 ஞாயிற்றுக்கிழமை**

**இடம்:** ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள லாயல்மில் ஆரம்பப் பாடசாலை
**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**ராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 30—7—78 ஞாயிற்றுக்கிழமை**

**இடம்:** பெரியகாளி அம்மன் கோவில்
**நேரம்:** காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**ராமநாதபுரம் ஜில்லா—அருப்புக்கோட்டையில் 30—7—78 ஞாயிற்றுக்கிழமை**

**இடம்:** S. B. K. பெண்கள் உயர்நிலைப்பள்ளி
**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**திருச்சியில் சின்ன செட்டிதெரு 13—8—78 ஞாயிற்றுக்கிழமை**

**இடம்:** ஸ்ரீ சித்திவிநாயகர் கோவில் K. P. S. சௌந்தரம்மாள் கல்யாண மண்டபம்
**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்

**தூத்துக்குடியில் 13—8—78 ஞாயிற்றுக்கிழமை**

**இடம்:** கிரேட் காட்டன் ரோட்டிலுள்ள காரப்பேட்டை ஆரம்பப் பாடசாலை
**நேரம்:** காலை 9-45 மணிமுதல் மாலை 5-00 மணிவரை
**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.




38674

प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

| சக்கரம் 27 | காளயுக்தி ஹு ஆடி மீ | ஆரம் 7 |
| --- | --- | --- |

## பிரார்த்தனை

परं गुह्यमिदं स्थानमव्यक्तं ब्रह्म निराश्रयम् ।
व्योमरूपं कलासूक्ष्मं विष्णोस्तत्परम् पदम् ॥

— तेजबिन्दूपनिषत्

பரம் குஹ்யமிதம் ஸ்தானமவ்யக்தம் பிரம்ம நிராஸ்ரயம் ।
வ்யோமரூபம் கலாசூக்ஷ்மம் விஷ்ணோஸ்தத்பரம் பதம் ॥

— தேஜபிந்தூபநிஷதம்

பரவஸ்து மறைந்திருக்கிறது. அது தோற்றத்திற்கு எட்டாத இருப்பிடம். அது எதையும் சாராதது. அது பரவெளி. நுண்ணியது. அதுவே விஷ்ணுவின் பரமபதமாம்,

வான்காண வேண்டின் மலையேற லொக்கும்உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

தீமை நலனை ஒரு நாளும் வெல்லாது.

வெறுப்புக்குப் பிறப்பிடம் அகங்காரம்.

சாந்தத்தில் நிலைபெற்றிருப்பவனுக்குச் சோர்வு இல்லை.

உண்மையை இயம்புவது மௌனத்திலும் மேலானது.

தெய்விகத்தில் திளைத்திருப்பதற்கு நிகரான ஏகாந்தமில்லை.

பரமாத்மாவின் சந்நிதானத்தில் பிரபஞ்சம் செயல் புரிகிறது.

அவாவுக்கு இடைஞ்சல் ஏற்பட்டால் அது சினமாக மாறுகிறது.

உயர் நோக்கம் நம் உள்ளத்தில் ததும்பிக் கொண்டிருக்கவேண்டும்.

கல்வி என்னும் மரத்தின் வேர் கசக்கிறது; அதன் கனி இனிக்கிறது.

கொடிய நெஞ்சம் பண்ணுகிற தீங்கை வேறு யாரும் பண்ணமுடியாது.

தர்மத்தைத் தீவிரமாகத் தழுவுகிறவன் தெய்வத்துக்குச் சொந்தமாகிறான்.

நான் அறிவு சொரூபமாக இருப்பதால் மற்றவர்களை நான் அறிகிறேன்.

கடவுளைச் சார்ந்திருக்கும் மனிதனிடம் அருள் வெள்ளம் கரைபுரண்டோடு கிறது.

கடவுளின் விளக்கத்துக்கு எல்லை இல்லை; ஆனால் அவை யாவும் சத்தியம் என்னும் ஒரு சொல்லில் அடங்கிவிடுகின்றன.

ஆசைக்கு அடிமைப்பட்டிருப்பது அற்ப மனது; உயர்ந்த இலட்சியத்துக்கு உழைப்பது உன்னதமானது.

அநீதியை அமைதியாக ஏற்றுக் கொள்ளுவதில் கேடில்லை. அநீதியைப் பிறர்க்கு வழங்குவது பெரும் கேடு.

தன்னுடைய தேவையைக் கெஞ்சிக் கேட்பது காமியப்பிரார்த்தனை. தன் தெய்வப்பெற்றியைத் திண்ணியதாக்கும்படி கேட்பது நிஷ்காமியப் பிரார்த்தனை.

இறைவா, உன்னை நான் மறக்கும் பொழுது என் வாழ்வு என்னும் இசை குழம்பிப் போகிறது. உன்னையே பார்த்துக் கொண்டிருக்கிற பொழுது அது ஒழுங்காக நிகழுகிறது.

### பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

கல்கத்தாவில் சிந்தி என்னும் பகுதியில் கூடியிருந்த பிரம்மசமாஜத்து அங்கத்தினர் களோடு பரமஹம்சதேவர் தொடர்ந்து உரை யாடலாயினர்: "அன்னை பராசக்தி கிருபை கூர்ந்து அந்தந்த ஆத்ம சாதகனுடைய பரிபா கத்துக்கும், மனப்பான்மைக்கும் ஏற்றவாறு அனுபூதியை வழங்கியருள்கின்ருள். பிரம்ம ஞானத்தை நல்குபவளும் அவளே. தூய பக் தியை வழங்குபவளும் அவளே. அகிலாண்ட நாயகியாக இருந்து அவள் புரிகிற அரிய பெரிய செயல்களைத் தனித்தனி வீடுகளில் தாயாக இருந்தும் செய்து வருகிருள். தாய் ஒருத்திக்குத் தன்னுடைய குழந்தைகளின் உடல் நிலையும், உடல் திட்பமும் நன்கு விளங்குகின்றன. அரிசியைக்கொண்டு ஒரு குழந்தைக்கு அதன் ஜீரண சக்திக்கேற்பக் கஞ்சியை ஆயத்தப்படுத்துகிருள். மற்ருெரு குழந்தைக்குச் சாம்பார் சாதம் படைக் கிருள். இன்னும் ஒரு மகனுக்கு அவனு டைய ஜீரணசக்திக்கேற்பக் கடினமான பொங்கல் ஆயத்தப்படுத்துகிருள். அது அவ ளுடைய பகுத்தறிவுக்கு அறிகுறி. மக்களுக் கிடையில் சமயங்களை எடுத்து வழங்குதலிலும் அதே கோட்பாட்டை அவள் கையாளுகின் ருள். ஒரு பாங்குடைய மக்களுக்கு விக்கிரக ஆராதனையோடு கூடிய வந்தனை வழிபாட்டை அவள் எடுத்து வழங்குகிருள். மற்றும் ஒரு மனப்பான்மை படைத்திருப்பவர்களுக்கு விக் கிரக ஆராதனையை ஒதுக்கி வைத்துள்ள மார்க் கத்தை எடுத்து வழங்குகிருள். பின்பு அவள் வழங்கியுள்ள மார்க்கங்கள் யாவும் மனிதனை மேல்நிலைக்கு எடுத்துச்செல்லவல்லவைகளாம். பிரம்ம சமாஜத்து அங்கத்தினர்களாகிய நீங்கள் அனைவரும் உங்களை ஞானிகள் என்று பாகு படுத்துகிறீர்கள். உண்மையில் நீங்கள் ஞானி கள் அல்லர். நீங்கள் பக்தர்களே. ஐதிகமாக வந்துள்ள ஞானமார்க்கம் மிகக் கடினமானது. அந்த மார்க்கத்தைக் கடைப்பிடிக்கிற ஞானி ஒருவன் இப்பிரபஞ்சத்தை வெறும் தோற்றம் என்ருே, கனவு என்ருே கருதுகிருன். இந்தத் தோற்றத்துக்கு அவன் மதிப்பு ஏதும் தருவ தில்லை. 'நான்' என்பதும், 'நீ' என்பதும் அவ னுக்குப் பொருளற்றவைகளாம். நாமரூபத்தை அவன் அங்கீகரிப்பதில்லை. சுத்த சைதன்யம் ஒன்றே நிஜநிலை. நெறிபிறழாது அவன் அதில் நிலைநிற்கின்ருன். உங்கள் போன்றவர்களுக்கு அது சாத்தியப்படாது. உங்களுக்குப் பிடிக்கா விட்டால் நீங்கள் விக்ரஹ ஆராதனை பண்ண வேண்டியதில்லை. ஆனால் பரம்பொருளிடத்து உங்களுடைய அன்பை மேலும் மேலும் வளர்த்து வாருங்கள். அப்படிச் செய்வதால் ஆத்ம சாதனத்தில் நீங்கள் நிச்சயமாக மேல் நிலைக்குப் போவீர்கள்.

"பரம்பொருள் நம் அனைவரிடத்தும் அந்த ராத்மாவாக இருந்துகொண்டு நம்மை இயக்கு கின்ருர். அப்பரமனிடத்துப் பிரார்த்தனை பண் ணுவது உசிதம். தூய உள்ளமும், கபடமற்ற மனப்பான்மையும் வேண்டுமென்று அப்பரமனி டம் வணங்கிவேண்டிக்கொள்ளுவது அவசியம். உள்ளத்தினுள் வீற்றிருந்துகொண்டு அப்பர வஸ்து தத்துவங்களனைத்தையும் ஆத்ம சாத கனுக்கு விளக்கியருளுகின்றது. அகங் காரத்தை ஒதுக்குதல் வேண்டும். அப்பரமனி டத்து அடைக்கலம் புகுதல்வேண்டும். அவனரு ளால் அவன் மகிமைகள் யாவும் அனுபூதியின் வாயிலாகப் பக்தனுக்கு வாய்க்கிறது".

பரமஹம்சர் பாடலொன்று பாடினர். அதன் உட்கருத்தாவது: "ஓ மனமே, நீ உள்ளத்தி னுள்ளேயே வீற்றிரு. வேற்ருர் வீடுகளில் எல் லாம் நீ நுழையவேண்டாம். உன்னிடத்தி லேயே இருக்கின்ற அரியபொருளை நீ தேடிப் பார். எதை நீ நாடுகின்ருயோ அது உன்னி டத்திலேயே இருக்கின்றது. பகவான் ஒருவரே ஸ்பரிசவேதி எனப்பகரப் பெறு கிருர். பண்ணுகிற பிரார்த்தனைகளனைத்துக் கும் அவர் செவி சாய்க்கின்ருர். உள்ளத்தினுள் ளேயே நீ ஆழ்ந்து மூழ்குவாயாகில் ஆழத்தில் அவர் அமர்ந்திருப்பதை அனுபூதியில் காண் பாய். அவருக்கு நிகரான செல்வம் ஏதும் இல்லையென்பதை நீ அறிய வருவாய். முத்துக்

கள்போன்றும், வைடுரியங்கள்போன்றும் அவருடைய மகிமைகள் அவரைச் சார்ந்திருக்கின்றன. ஒருசிலர் இந்த ரத்தினங்களைப் பார்த்து அவைகளிலேயே மயங்கிக் கிடக்கின்றனர். ஓ மனமே, நீ அவையாவையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு அவைகளை உடையவனாகிய பரமனையே தரிசித்து அவனுடைய பரமானந்தத்தில் திளைத்திருப்பாயாக."

இப்பாடலைப் பாடியான பிறகு தம்முடைய சம்பாஷணையைப் பரமஹம்ச தேவர் மேலும் தொடர்ந்து நிகழ்த்துவாராயினர்: "பிரம்ம சமாஜத்து அங்கத்தினர்களாகிய நீங்கள் உங்கள் சமாஜத்தவர்களோடு மட்டும் உறவாடுவது போதாது. பொதுப்பட மதவாதிகளிடம் குறைபாடு ஒன்று உளது. தங்கள் மதத்தைச் சேர்ந்தவர்கள் அல்லாமல் புறமதங்களைச் சேர்ந்தவர்களோடு உறவாடினால் அது தங்களுடைய சொந்த மதத்துக்கு இடுக்கண் செய்வதற்கு நிகராகும் என்றும் தாங்கள் வழிபடும் தெய்வம் புறமதத்தவர்களோடு உறவாடுவதை ஆமோதிக்காது என்றும் கருதுகின்றனர். அப்படிக் கருதுவது பிழை. மற்றவர்களோடும் இணங்கியிருத்தல் வேண்டும். மற்றவர்களையும் உள்ளன்போடு நேசித்தல் வேண்டும். மற்றவர்களோடு இணக்கம் கொள்ளுகிறபொழுது அவர்களை உங்கள் மயமாக நீங்கள் கருத வேண்டும். மற்றவர்களிடத்து வேற்றுமை புத்தியை வளர்க்க வேண்டாம். வேற்றுரிடத்துத் துவேஷம் பூண்டுகொண்டு, ஓ இம்மனிதன் கடவுளை வடிவம் படைத்தவர் என்று வைத்துக்கொண்டு விக்கிரஹத்தின் வாயிலாக வணங்குகின்றான். நிர்க்குண நிராகாரப் பிரம்மத்திடத்து இவனுக்கு இன்னும் நாட்டம் வரவில்லை என்று அவனை அலட்சியப்படுத்த வேண்டாம். ஓ இம்மனிதன் ஒரு கிறிஸ்தவன். ஓ அம்மனிதன் ஒரு ஹிந்து. இதோ இந்த மனிதன் ஒரு முஸல்மான். இப்படியெல்லாம் மக்களைப் பாகுபடுத்த வேண்டாம். கடவுள் ஒருவரே. மக்கள் எல்லார் உள்ளத்திலும் வீற்றிருந்து கொண்டு அவரவர் பாங்குக்கேற்றபடி அன்னவர்களை அவர் பக்குவப்படுத்தி வருகிறார். மக்களுடைய பாங்குகள் பலதரப்பட்டவைகள் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். பாங்குகளில் பாகுபாடுகள் ஏராளமாக இருந்தாலும் மக்கள் எல்லாரும் பரமனுக்குரியவர்களே என்னும் உண்மையை மறந்துவிட வேண்டாம். உள்ளன்போடு மக்கள் எல்லாரிடமும் இணக்கம் பூணுங்கள். பிறகு வழிபாட்டில் இறங்குகின்ற பொழுது மனதை உள்முகமாகத் திருப்புங்கள். உள்ளத்தினுள்ளே நிலைத்திருக்கிற அமைதியிலும் ஆனந்தத்திலும் திளைத்திருங்கள்.

"உள்ளம் என்னும் பெருங்கோயிலினுள்ளே ஞான விளக்கு ஏற்றி வையுங்கள். பரப்பிரம்மத்தின் சொரூபமாகிய அன்னை பராசக்தியின் அருள் சொட்டும் முகவிலாசத்தை ஆங்குக் காணுங்கள். மெய்ப்பொருள் ஒன்றுதான் உளது. அப்பொருளை அன்னை பராசக்தியாகக் கருதலாம். அதேபொருளைச் சகுணப்பிரம்மமாகக் கருதலாம். பின்பு அவ்வஸ்துவையே நிர்க்குணப் பிரம்மமாகக் கருதலாம். இதற்குச் சான்று ஒன்று இருக்கிறது. ஒரே மனிதன் ஏககாலத்தில் நகரத்திற்குரிய பிரஜையாகவும், தந்தைக்குரிய புத்திரனாகவும், மனைவிக்குரிய கணவனாகவும், செல்வனுக்குரிய அப்பனாகவும் இருந்து வருகிறான் அல்லனோ? அம்மனிதனோடு மற்றவர்கள் இங்ஙனம் வெவ்வேறு பாங்குகளில் இணக்கம் பூணுதலில் பொல்லாங்கு ஏதுமில்லை. அதே விதத்தில் தெய்வத்தோடு நாம் நமக்கு விருப்பமான எத்தகைய இணக்கத்தை வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம். வைக்கின்ற இணக்கம் முக்கியமானதன்று. அந்த இணக்கத்தை எவ்வளவு தூரம் ஆழ்ந்து சிக்கெனப் பிடிக்கிறோம் என்பதே மிக முக்கியமானது.

"ஒவ்வோர் ஆத்ம சாதகனும் அவனவனுடைய அந்தக்கரணம் என்னும்கோயிலினுள் பிரவேசிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். தன்னுடைய நிஜசொருபத்தை அவன் தன்னுள்ளேயே தரிசித்தல் வேண்டும். இடையர்கள் பசுக்களை மேய்ப்பதற்கு மைதானத்துக்கு ஓட்டிச் செல்லுகின்றனர். ஆங்கு அவைகள் ஒன்றோடொன்று இணங்குகின்றன. ஒரு பெரிய மந்தையாக அவைகள் காட்சி கொடுக்கின்றன. மந்தையின் பசுக்கள் ஒன்றோடொன்று சண்டைபோட்டுக்கொள்வதில்லை. ஒன்றை ஒன்று அன்புடன் நக்கிக் கொடுத்துக்கொள்கிறது. அந்த மைதானமே அவைகளுக்கு இருப்

பிடமாகாது. மாலை நேரம் வருகிற பொழுது அவைகள் வீட்டுக்குத் திரும்புகின்றன. அப்பொழுது அந்தந்த வீட்டுக்குரிய பசுக்கள் மந்தையினின்று பிரிந்துகொள்கின்றன. வீட்டுக்கு வந்தானபிறகு ஒவ்வொரு பசுவும்அததற்குரிய தொழுவத்தில் தங்குகிறது. கால்நடைகளின் செயலினின்று மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் ஒன்று இருக்கிறது. புற உலக வியவகாரங்களில் ஈடுபடும் பொழுது மற்ற மனிதர்களோடு குலாவிக் கூடியிருங்கள். வழிபடுவதற்குரிய நேரம் வருகிறபொழுது புறவுலக இணக்கங்களையெல்லாம் புறக்கணித்துவிட்டு உங்களுடைய உள்ளத்தினுள்ளே அந்தர்முகதிருஷ்டியில் ஆழ்ந்து ஈடுபடுங்கள்.

"தியானத்துக்குப் பலபேர் ஒரே கூடத்தில் சேர்ந்து அமர்ந்திருக்கலாம். ஆனல் தியானத்தில் ஈடுபடுகின்றபொழுது சத்சங்கத்தைப் பற்றிய உணர்ச்சி இருக்கலாகாது. வழிபடு தெய்வத்தைப்பற்றிய உணர்ச்சியே உள்ளத்தினுள் ஆழ்ந்து உருவெடுக்கவேண்டும். இது எதற்கு நிகர் என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். பலபேருடன் பந்தியில் அமர்ந்துகொண்டு போஜனம் பண்ணுகின்றோம். உண்டிக்கழகு விருந்தோடு உண்ணல் என்பது பெரிய கோட்பாடு. ஆனல் ஒருவருக்காக இன்னொருவர் உண்ணமுடியாது. உண்ட உணவை ஒருவருக்காக இன்னொருவர் ஜீரணம் பண்ணமுடியாது. அங்ஙனம் ஆழ்ந்த ஆத்மசாதனம் அவரவருடைய தனிச்செயல்என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்."

இப்பொழுது இரவு மணி பத்து ஆகிவிட்டது. பரமஹம்சதேவர் தக்ஷிணேசுவர ஆலயத்துக்குத் திரும்பிப் போய்ச் சேர்தல் பொருட்டு வண்டியினுள் ஏறிக்கொண்டார். அவருக்குப் பணிவிடைகள் புரிந்துவந்த இரண்டொரு பக்தர்களும் இந்த வண்டிக்குள் ஏறிக்கொண்டார்கள். வண்டியோ ஒரு மரத்தின் கீழ் நின்றுகொண்டிருந்தது. ஒரே கார் இருள் எங்கும் படர்ந்திருந்தது. அன்றைய நிகழ்ச்சிகளுக்கு அதிதிபதியாயிருந்த பெனிபால் என்பார் அவ்வண்டியிலே பட்சண வகைகள் சில அனுப்பிவைக்க ஏற்பாடு செய்தார். பரமஹம்சதேவருடைய தமையனர் ராமேஸ்வரரின் புதல்வராகிய ராம்லால் என்பாருக்கு அந்தப் பட்சண வகைகள் போய்ச் சேரும்படி அவர் ஏற்பாடு செய்தார்.

பெனிபால்: "ஐயனே இன்று மாலை நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் ராம்லால் வந்து கலந்துகொள்ளவில்லை. ஆதலால் இந்த அன்பர்கள் மூலமாக அவருக்குக் கொஞ்சம் தின்பண்டங்கள் அனுப்பிவைக்க விரும்புகிறேன். அதற்கு உங்கள் அனுமதியைப் பணிவுடன் வேண்டுகிறேன்."

பரமஹம்சதேவர்: (சிறிது ஆவலுடன்) "ஓ ஐயனே, பெனிபால், வேண்டாம். அச்செயலில் ஈடுபடவேண்டாம். நான் ஊர்ந்து செல்லுகிற வண்டியில் என்னேடு சம்பந்தப்பட்டவர்களுக்காகவென்று பண்டம் எதையும் அனுப்பி வைக்கலாகாது. அது எனக்குப் பெருந்தீங்கை விளைவிக்கும். பரிகிரஹத்துக்கும் எனக்கும் வெகுதூரம். அடுத்த வேளைக்காகவென்று எதையும் எடுத்து வைக்க நான் ஆமோதிப்பதில்லை. என் பாங்கு இப்படியிருப்பதால் இது விஷயத்தில் தாம் சங்கடப்பட மாட்டீர் என எண்ணுகிறேன்."

பெனிபால்: "ஐயனே தங்களுடைய பாங்குக்கு மாருக நான் எதையும் செய்யமாட்டேன். தாங்கள் என்னை ஆசீர்வதித்தால் போதுமானது."

பரமஹம்சதேவர்: "ஓ இன்று ஒரு சுபதினம். இந்த நன்னளிலே தெய்விக விஷயங்களிலேயே நாம் இன்புற்றுக் காலம் கழித்து வந்தோம்! தாம் விஷயம் ஒன்றைக் கருத்தில் வைத்துக் கொள்வீராக. பணத்துக்கு அடிமைப்பட்டிருக்கிறவன் நன்மகன் ஆகமாட்டான். யாரொருவன் பணத்தைத் தன் பணிவிடைக்காகவென்று படைத்திருக்கின்ருனே அவனே மேன்மகன் ஆகிருன். மானுட வடிவம் தாங்கியிருக்கிற எல்லாரையும் மக்களாக நாம் கருதலாகாது. பணத்தை எப்படிப் பயன்படுத்துவது என்பதை அறிந்துகொள்ளாத மனிதனை மாக்கள் கூட்டத்தில் சேர்க்கவேண்டும். மானுட வடிவங்கள் தாங்கியுள்ள விலங்குகளே மாக்கள் ஆகின்றனர். பெனிபாலரே, தாம் பாக்கியவான். பக்தர்கள் பல பேருக்குத் தாம் இன்று அருள்துறையில் தொண்டுபுரிந்து அன்னவர்களைத் தெய்விக இன்பத்தில் திளைத்திருக்கச்செய்திருக்கிறீர்கள்."

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

356. உருவெளிதான் வாதவூர்
உத்தமர்க்கல் லாலினமுங்
குருவழிநின் ரூர்க்குமுண்டோ
கூருய் பராபரமே.

உருவெளி-பரவஸ்து வடிவெடுத்துத் தன்னை விளக்குதல்; வாதவூர் உத்தமர்-மாணிக்கவாசகர். குருவழி-குருசிஷ்ய பரம்பரை.

மாணிக்கவாசக சுவாமிகள் வாதவூரர் என்னும் நாமம் தரித்திருந்தார். மதுரைக்குப் பக்கத்திலிருக்கும் திருவாத வூரிலே அவர் திருமேனி தாங்கிப் பிறப்பெடுத்ததனல் அந்த வூரின் பெயரை இடுகுறியாக வைத்துக் கொண்டே அவர் அழைக்கப்பட்டு வருகிறார். கல்விப் பண்பும், நிர்வாகத் திறமையும் ஒருங்கே அமையப் பெற்றிருந்த திருவாதவூரர் பாண்டி மன்னன் ஆட்சியில் முக்கியமான மந்திரியாக இடம் பெற்றிருந்தார். உலக வியவகாரங்களைத் திறமையுடன் நிர்வகித்து வந்ததற்கிடையில் அவருடைய மனதின் பெரும் பகுதி பரநாட்டத்திலேயே ஆழ்ந்து பதிந்து இருந்தது. அந்தத் தெய்விகப் பெற்றியை உலகம் அறியமாட்டாது. இவ்வுலகுக்குரிய செயல்கள் உலகத்தவர்களுக்கு நன்கு விளங்குகின்றன. நிர்வாகத் திறமையை முன்னிட்டுப் பாண்டி மன்னன் இந்த அமைச்சருக்குத் தென்னவன் பிரமராயன் என்னும் பட்டம் அளித்திருந்தான். அப்பட்டத்துக்கும் வாதவூரர் முற்றிலும் தகுதி வாய்ந்தவராக இருந்தார்.

அக்காலத்தில் கடலின் கீழ்க்கரையில் அராபிக் குதிரைகள் விற்பனைக்காக இறக்குமதி செய்யப்பட்டிருந்தன. அதை அறிய வந்த பாண்டிய மன்னன் குதிரைகள் பல விலைக்கு வாங்குவதற்குத் திருவாதவூரரிடம் திரவியத்தை ஏராளமாகக் கொடுத்தனுப்பினன். கிழ்த்திசையை நோக்கிப் பயணம் போய்க் கொண்டிருந்த வாதவூரர் திருப்பெருந்துறை என்னும் சிவஸ்தலத்தை அணுகினர். ஆங்குக் குருந்த மரம் ஒன்றன் அடியில் சிவாச்சாரியர் ஒருவர் சிவனடியார்களுக்குச் சிவஞான போதம் பாடம் புகட்டிக்கொண்டிருந்தார். அக் காட்சியைக்கண்ட வாதவூரர் தம்மை மறந்தார். அரசாங்கத்திற்குத் தாம் ஆற்றுதற்கிருந்த கடமையையும் மறந்தார். ஆச்சாரியாரிடம் தம்மை முற்றிலும் சமர்ப்பித்தார். சிவனார் தாமே மானுட வேடம் தாங்கி அத்தகைய ஆச்சாரியனாக எழுந்தருளியது வாதவூரரின் தவப்பயனாகும். பரம்பொருளால் ஆட்கொள்ளப்பட்டதின் விளைவாக வாதவூரர் நிகழ்ந்த சில அல்லல்களையெல்லாம் பொறுமையுடன் சகித்துப் பரமனுக்கே உரியவரானார். அறங்களுள் சிறந்த துறவறத்தைப் பூண்டார். திருவாசகம் என்னும் தெய்விகப் பாடல்களைப் பகர்ந்தருளினர். இறைவனாலேயே 'மாணிக்கவாசகன்' என்று அழைக்கப்பெற்றார். பண்பட்டுள்ள ஜீவாத்மன் ஒருவனுக்குப் பரமாத்மன் எத்தகைய பேருதவி புரிகிறார் என்பதற்கு வாதவூரருடைய வரலாறே நல்ல எடுத்துக்காட்டு ஆகிறது. வாய்ப்பதற்கரிய அத்தகைய பெரு நிகழ்ச்சி மீண்டும் வாய்க்குமா? வாய்க்குமானல் அதற்கு இலக்கு ஆகக் கூடிய ஆத்ம சாதகன் யாராக இருக்கக்கூடும்? என்னும் திகைப்பு இக்கண்ணியில் திகழுகிறது. பக்தி ததும்புகின்ற பாங்கில் இந்த நிகழ்ச்சியைத் திரும்பத் திரும்ப உன்னுவதே நல்ல ஆத்ம சாதனமாகும்.

357. தேகம்யா தேனுமொரு
சித்திபெறச் சீவன்முத்தி
ஆகுநெறி நல்லநெறி
ஐயா பராபரமே.

சித்தி–நிறைநிலையெய்துதல்.

ஜீவாத்மாவாயிருப்பவன் ஜீவன் முக்தி பெறுவது மானுட ஜென்மத்தின் குறிக்கோள் ஆகும். பிரபஞ்சத்தின் கூறுகளாகிய ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் ஆகிய மூன்றுவித தேகங்களோடு தன்னை இணைத்துக் கொண்டிருக்கும் ஆத்மா ஜீவாத்மா ஆகிறான். இந்தத் தேகங்கள் பிராரப்த கர்ம பலனாக ஜீவாத்மனுக்கு வாய்க்கின்றன. ஒரு சரீரத்துக்குரிய பிராரப்தம் முடிவுறுகிற பொழுது அந்தச் சரீரம் வீழ்கிறது. இனி அடுத்த சரீரம் எடுப்பதற்குப் பழவினைத் தொகையில் ஒரு பகுதி அடுத்த பிராரப்தமாக

முன் வந்து நிற்கிறது. இங்ஙனம் பிறப்பு இறப்பைப் பெருக்கிக்கொண்டே போவது அக்ஞானத்தில் உழலும் ஜீவாத்மாவின் பாங்கு ஆகும். பிறவிப் பெருங்கடலில் சலிப்புத் தட்டி இதினின்று தன்னை விடுவித்துக் கொள்ள எண்ணம் வருகிறபொழுது அந்த ஜீவாத்மன் முமுக்ஷு என்று அழைக்கப் பெறுகிறான். மோக்ஷத்தை அல்லது முக்தியை நாடுபவன் என்பது இதன் பொருள். பற்று நீங்குதற்கேற்ப மோக்ஷ சாதனத்தில் முமுக்ஷு ஒருவன் விரைந்து மேல்நோக்கிச் செல்லுகிறான். சாதனங்களைத் தீவிரமாகக் கடைப்பிடிக்கிறவனுடைய சரீரம் விரைந்து பண்பாடடைகிறது. தெய்வத்துக்கும், குருவுக்கும் சான்றோர்க்கும் ஊக்கத்தோடு பணிவிடை செய்வதின் வாயிலாக ஸ்தூல சரீரம் புனிதமடைகிறது. அதை யாண்டும் தேவாலயமாகக் கருதித் தூயநிலையிலேயே வைத்திருப்பதின் வாயிலாகவும் அவ்வுடல் மேன்மையுறுகிறது. நேர்மையே வடிவெடுத்தவனாக ஆத்மசாதகன் வாழ்ந்துவருகின்றான். விரதங்களுள் மகாவிரதமாயிருக்கின்ற பிரம்மச்சரியத்தில் ஆத்ம சாதகன் உறுதியாக நிலை நிற்கின்றான். அப்படிச்செய்வதால் மானுட மேனியில் தெய்வப்பெற்றி தானாக உருவெடுக்கிறது. அது தேவாலயமாக மாறியமைகிறது. ஆதலால் அதைத் தேகசித்தி எனலாம். சரீரத்தைக்கொண்டு எவ்வுயிர்க்கும் சாதகன் இன்னல் விளைவிப்பதில்லை. அஹிம்சையில் அவன் உறுதியாக நிலைநிற்கின்றான். இந்த நிபந்தனைகளையெல்லாம் இனிது நிறைவேற்றுகின்றவன் தன்னுடைய ஸ்தூல சரீரத்தை முற்றிலும் தூயதாக்கியவன் ஆகின்றான். மூன்று சரீரங்களுள் ஸ்தூல சரீரத்தின் சித்தி இங்ஙனம் வாய்க்கிறது. ஆத்மசாதகன்பேசுகிற பேச்செல்லாம் சத்தியம் அல்லது வாய்மையில் நிலைபெற்றிருக்கிறது. சொல்லால் அவன் யாரையும் துன்புறுத்துவதில்லை. பிரீதிகரமானதும் நலனை விளைவிப்பதுமாகிய இன்சொல்லையே அவன் இயம்புகிறான். பக்தி புகட்டும் ஆன்மீக நூல்களை அவன் ஊக்கத்துடன் ஓதிப் பழகுகிறான். அவனுடைய மனது யாண்டும் நேர்மையில் நிலைத்திருக்கிறது. நல்ல எண்ணங்களே உள்ளத்தில் உதிக்கின்றன. மௌனம் அல்லது பேச்சற்ற நிலையில் அவனுடைய மனது திளைத்திருக்கிறது. இத்தகைய முறைகளைக் கையாளுவதின் வாயிலாக ஆத்ம சாதகனுடைய சூட்சும சரீரம் சித்தியடைந்து வருகிறது. உலக ஆசைகளனைத்தையும் ஆத்மசாதகன் ஒதுக்கித் தள்ளுகிறான். அருள் நாட்டம் அவனிடத்தில் மேலும் மேலும் ஓங்குகிறது. தெய்வப்பெற்றி நாள் ஏறஏற முன்னணியில் வந்து நிற்கிறது. அதன் வாயிலாக ஆத்ம சாதகனுடைய காரண சரீரம் சித்தி பெறுகிறது. இந்தச் சாதனவகைகளனைத்தையும் ஒருங்கே தீவிரமாகக் கையாளுபவனுக்கு முத்தேக சித்தி இறைவனருளால் வாய்க்கிறது.

மூன்று தேகங்களும் மூன்று கவசங்களாக ஆத்ம சொருபத்தைச் சார்ந்திருக்கின்றன. சாதகன் சாதனத்திலே பக்குவம் அடைந்து வருவதற்கேற்பத் தேகாத்ம புத்தி அல்லது தேகத்தைத் தானாகக் கருதுதல் மறைந்து பட்டுப் போகிறது. மூன்று தேகங்களையும் முறையாகச் சித்தி செய்கின்ற சாதகனே ஜீவபோதத்தைத் தாண்டி பரபோதத்தில் நிலை பெறுகின்றான். அப்பொழுது அவன் ஜீவ முக்தன் என இயம்பப் பெறுகின்றான். இத்தத்துவத்தை அறிந்து கொள்வதற்கு உபமானம் ஒன்று பயன்படும். புளியம் பிஞ்சில் மேலோடும், சதைப் பகுதியும், விதையும் ஒன்றிலொன்று பிணைந்து கிடக்கின்றன. புளியம் பிஞ்சைத் தின்கின்றவர்கள் மூன்று பகுதிகளையும் மென்று விழுங்குகின்றனர். ஆனால் புளியம் பிஞ்சு சித்தியடைந்தால் மேல் ஓடு வேறு, பழம் வேறு, கொட்டை வேறாகப் பிரிவுபடுகின்றன. அங்ஙனம் ஜீவாத்மன் ஜீவன் முக்தியில் நிலைபெறுங்கால் மூன்று தேகங்களுக்கும் அப்பால்பட்டவனாக அவன் தன்னுடைய நிஜசொருபத்தில் திகழ்கின்றான். பிராரப்த கர்மம் முடியும் வரையில் நிழல் போன்று தேகம் அவனைச் சார்ந்திருக்கிறது. வினை ஓய்ந்து ஆக்கை விழுங்கால் அவன் விதேக முக்தன் ஆகின்றான். இதற்காக வென்று தங்களைத் தீவிரமாகப் பக்குவப்படுத்துகிறவர்கள் நல்ல நெறி அல்லது சன்மார்க்கத்தில் பயிலுபவர்கள் ஆகிறார்கள். இறைவனுடைய திருவருளை முன்னிட்டு நன்னெறி சார்ந்திருப்பவன் பரத்துக்குரியவனாகிறான் என்பது இக்கண்ணியினுடைய கருத்து.

---

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

உன்னைத் திருத்தி அமைக்கின்ற செயல் தவம் எனப்படுகிறது. உள்ளம் தவத்தில் ஈடுபடுகின்றவளவு உயர்நிலை வந்தமைகின்றது. உடலை வருத்துதல் தவம் என்று எண்ணிச் சிலர் அச்செயலில் ஈடுபடுகின்றனர். உடலை வருத்துவதைப் பல முறைகளில் செய்கின்றார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் படுப்பதோ, உட்காருவதோ செய்வதில்லையென்று ஒருவன் தீர்மானித்தான். அதன்படியே பன்னிரண்டு ஆண்டுகளுக்கு நிற்பதாக முடிவுசெய்து செயல்படுத்திக் கொண்டிருந்தான். நான் அவனைச் சந்தித்தபொழுது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு இன்னும் ஐந்து அல்லது ஆறு மாதங்கள்தாம் பாக்கி இருந்தன. அவன் அப்படித் தொடர்ந்து பல ஆண்டுகள் நின்றதன் விளைவாக யானையின் கால்கள் போன்று அவனுக்குக் கால்கள் வீங்கிவிட்டன. தூக்கம் வந்தால் உடல் சாயாதிருக்கும் பொருட்டு உடம்பைக் கயிற்றால் கட்டி அதைக் கீழே விழாமல் தடுத்து நிறுத்தினான். இன்னும் சிலர் குளிர் காலத்தில் இரவு நேரத்தில் கழுத்தளவு நீரில் நின்று கொண்டு ஜபம் செய்து கொண்டிருப்பார்கள். இன்னும் சிலர் தங்களைச் சுற்றிலும் நான்கு புறமும் நெருப்பு மூட்டி உச்சந்தலையில் சூரிய வெயில் விழும்படியாகப் பஞ்சாக்கினி தபசு செய்வார்கள். இங்ஙனம் உடலை வருத்துவதைத் தவம் என்று எண்ணிக்கொண்டிருக்கின்றனர்.

உண்மையான தவம் எது என்பது தெரியுமா? மேற்கூறியவைகளெல்லாம் உண்மையான தவங்களாகா. அத்தகைய செயலை யார் வேண்டுமென்றாலும் செய்யலாம். சரீரத்தைக் கட்டுப்படுத்துவது மிகவும் சுலபம். ஆனால் மனதிலுள்ள காம காஞ்சனங்களைத் துறப்பதும் பேர் புகழில் உள்ள விருப்பத்தைத் துறப்பதும் மிகக் கடினமானவை. உண்மையான தவத்துக்குச் சில அடிப்படைகள் இருக்கின்றன. அவைகளுள் மூன்று மிக முக்கியமானவை. முதலில் நீ மெய்ப்பொருளிடத்து உன்னை ஒப்படைக்க வேண்டும். மெய்ப்பொருளையே முற்றிலும் சார்ந்திருக்க வேண்டும். மெய்ப்பொருளை உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொண்டு எச்செயலையும் செய்யவேண்டும். இரண்டாவதாகக் காமத்தை வெல்லவேண்டும். மூன்றாவதாக ஆசைகளை விட்டொழிக்க வேண்டும். மெய்ப்பொருளை உறுதியாகப் பற்றிப் பிடித்துக்கொண்டு காமத்தையும், மற்ற ஆசைகளையும் விட்டொழித்து விட்டால் நீ தவத்தில் ஈடுபட்டவனாகின்றாய். உண்மையான தவம் என்பது இதுவேயாம். காமத்தை வெல்லுவது மிக முக்கியமானது. பன்னிரண்டு ஆண்டுகள் முழுமையாகப் பிரம்மச்சரியத்தை அனுசரிப்பவன் சுலபத்தில் கடவுள் காட்சி பெற்று விடுவான் என்று சாஸ்திரங்கள் பகர்கின்றன. ஆனால் பிரம்மச்சரியம் கடைப்பிடிப்பது மிகவும் கஷ்டமானது. பிரம்மச்சரியம் கடைப்பிடிக்காது நீ முறையாகத் தியானமும் செய்ய முடியாது. உள்ளத்திலுள்ள காமம் அகலும் அளவுதான் பிரம்மத்தைக் குறித்துத் தியானத்தில் மனது ஆழ்ந்து போகிறது. காமம் மிக சூக்ஷ்மமானது. ஆகையால் அதை அடக்குவது மிகவும் கஷ்டம். ஆத்ம சாதகர்கள் காமத்தை வெல்லுவதில் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மனதில் காமவிகாரம் உள்ள ஆண்கள் பெண்களோடு பழகுவதில் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் நெறியினின்று வழுவ ஏதுவாகிவிடும். அஃதே போன்று காமவிகாரமுள்ள பெண்கள் ஆண்களிடத்தில் பழகும்பொழுது மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும். அப்படிப் பழகும் சந்தர்ப்பம் ஏற்படும் பொழுது ஆண்கள் பெண்களைச் சக்தி சொரூபமாகவும், பெண்கள் ஆண்களைச் சிவ சொரூபமாகவும் கருத வேண்டும்.

மனதில் காம எண்ணங்கள் தலையெடுக்கும் பொழுது இறைவனுடைய நாமத்தை உச்சரித்துப் பழகவேண்டும். மனம் ஜபத்தில் ஈடுபடும்பொழுது காமம் வெல்லப்படுகிறது. பிரம்மச்சரிய தவம்தான் மேலான தவமாகிறது. பிரம்மச்சரியத்தின் மூலம் மூளையில் அபூர்வ சக்தி உண்டாகிறது. பிரம்மச்சரியத்தில் நிலை நிற்பாயானால் எங்கும் கடவுள் காட்சியை

நீ காண்பாய். சாதனை செய்யாது பிரம்மச்சரியத்தை நீ கடைப்பிடிக்க முடியாது. ஜபம் எவ்வளவு செய்கின்றாயோ அவ்வளவு உன் உள்ளம் தூய்மையாகிறது. உன் உள்ளத்திலுள்ள சூக்ஷ்மமான காம ஆசைகள் ஜபத்தின் மூலமாகவும், தியானத்தின் மூலமாகவும் வெல்லப்படுகின்றன.

சமுதாய சேவையைப் பற்றித் தற்காலத்தில் வெகுவாகப் பேசப்படுகின்றது. தேசத்துக்கும் தேச மக்களுக்கும் தொண்டுபுரிவதில் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணிக்க வேண்டுமென்று பலர் நினைக்கின்றனர். அது இன்றைய நாகரிகமாக இருக்கிறது. மக்களுக்குச் சேவைபுரிய வேண்டுமென்று படித்தவர்கள் இன்று பிரமாதமாகப் பேசுகிறார்கள். நவீனக் கல்வி அவர்களை அப்படிப் பேசும்படி தூண்டுகிறது. அவர்கள் நினைப்பது போன்று செயல்பட முடிவதில்லை. மக்களுக்குச் சேவை செய்கிறோம் என்று பேசிக்கொண்டு சுய தேவையைப் பூர்த்தி செய்வதில் வாழ்நாளை அர்ப்பணிக்கின்றார்கள். தங்கள் உள்ளத்தைப் பண்படுத்தாத மக்கள் மக்களுக்கு நலன் எதுவும் செய்ய முடியாது. தூய்மையான உள்ளமும், உறுதியான உள்ளமும், அன்பு உள்ளமும், சேவை உள்ளமும், தியாக உள்ளமும் படைத்தவர்களே மக்களுக்கு ஏதாவது நலன் செய்ய முடியும். சேவை செய்ய விரும்பும் மக்கள் முதலில் தங்களுடைய உள்ளத்தில் அத்தகைய பண்புகளை ஏற்ற வேண்டும். அதன் பிறகு அவர்கள் தங்களை முற்றிலும் தெய்வத்திடம் ஒப்படைக்க வேண்டும். அவர்களுக்குத் தெய்வத்தின் அருள் கிடைக்கிறது. அவர்கள் ஒரு பொழுதும் தவறு செய்யமாட்டார்கள். அத்தகையவர்கள் தங்கள் வாழ்க்கை மூலம் மக்களுக்கு நன்மை செய்கின்றார்கள். அவர்களுடைய ஒவ்வொரு செயலும், ஒவ்வொரு சொல்லும், அவர்கள் நடத்தையும் மக்களுக்கு நலத்தையே நல்கிக்கொண்டிருக்கும். கடவுள் என்ற தூணை முதலில் பிடித்துக் கொண்டால் வாழ்க்கையில் நீ வழுவமாட்டாய். கடவுள் காட்சி பெறுவதே மனித வாழ்வின் லட்சியம். ஆகையால் முதலில் கடவுள்காட்சி பெறு. கடவுளிடத்தில் அசைக்கமுடியாத நம்பிக்கை வை. அதன் பிறகு மக்களுக்குச் சேவை செய். கடவுளை அறிந்து அவருடைய கையில் கருவியாக இருக்க நீ தெரிந்து கொள்வாயானால் நீ யாண்டும் சாந்தமூர்த்தியாக இருந்து மற்றவர்களுக்கும் சாந்தத்தைக் கொடுத்துக்கொண்டிருப்பாய். உன்னை நீ திருத்தி அமைக்கின்றவளவுதான் உலகுக்கு நீ பயன்படுகின்றாய். ஆகையால் முதலில் உன்னைத் திருத்தியமைப்பதில் தீவிரமாகப் பாடுபடு. நீ திருந்தியமைகின்றவளவு உலகுக்கு நீ உதவி செய்வது உன்னையறியாது நிகழ்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதாவது: "பக்தர்களுடைய உள்ளத்தில் பகவானுடைய சான்னித்தியம் நன்கு விளங்குகிறது. உன் உள்ளத்தைப் பகவானுக்குரியதாக்க அதைத் தூய்மைப்படுத்து. தூய்மையான உள்ளத்தை அவர் இருப்பிடமாகக் கொள்கின்றார். மாசுபடிந்த உள்ளத்தை உடையவர்களுக்கு அவர் சேய்மையில் உள்ளவராகின்றார். உன்னுடைய உள்ளம் கண்ணாடிபோன்று தூயதாகும் பொழுது, உன்னுடைய உள்ளத்திலுள்ள பழைய சம்ஸ்காரங்களெல்லாம் துடைக்கப்படும்பொழுது உன் உள்ளத்தில் தெய்வத்தின் சான்னித்தியத்தை உணர்வாய்."

தூயமனம் கடவுளைப் பிரதிபிம்பிக்கிறது. கண்ணாடி அழுக்கடைந்திருந்தால் அதில் பிம்பத்தைக் காணமுடியாது. அது போன்று அழுக்கடைந்த மனதில் ஈசனுடைய பிம்பத்தைக் காணமுடிவதில்லை. இளைஞர்கள் பாக்கியவான்கள். ஏனென்றால் அவர்களுடைய உள்ளம் உலக பந்தத்திலிருந்து விலகியிருக்கிறது. நீ இன்னும் இளைஞனாகவிருக்கின்றாய். உன்னுடைய உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருந்து அதைக் கடவுளுக்கு உரியதாக்கு. உலக பந்தம் உன் உள்ளத்தில் புகுந்து விடாது நீ பார்த்துக்கொள். விழித்திருக்கிறவர்களுடைய வீட்டில் திருடன் நுழையமாட்டான். நீ விழிப்புடன் இருந்தால் உன் உள்ளத்தில் உலக ஆசைகள் புகா. தூய்மையும் சாந்தமும் உடையவனாக இரு. இதே வாழ்க்கையில் கடவுள் காட்சியைப் பெற்றுப் பேரானந்தம் பெறு. பேரின்பத்தை மறைத்துக்கொண்டிருக்கின்ற அஞ்ஞானம் என்னும் திரையை நீக்கிப் பேரின்பம் சொருபமாக இரு.

# தியானம்

(சுவாமி விவேகானந்தர் 1900 ஆம் ஆண்டில் ஸான்பிரான்ஸிஸ்கோவிலுள்ள வாஷிங்டன் மண்டபத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

எல்லாச் சமயங்களும் தியானத்தை வற்புறுத்துகின்றன. மனம் இருக்கும் பெரிய நிலைகளுள் தியான நிலையே பெரிய நிலையாகுமென்று யோகிகள் பகர்கின்றார்கள். புறப்பொருள்களை மனம் ஆராயும்பொழுது அப்புறப்பொருள்களோடு தன்னை ஒன்றுபடுத்தி அவை மயம் ஆகிவிடுகின்றது. இந்திய தத்துவ ஞானி ஓர் உபமானம் கொண்டு அவ்வுண்மையை விளக்குகின்றார். மனிதனுடைய மனதை ஸ்படிகத்துண்டுக்கு ஒப்பிடலாம். ஸ்படிகத்துக்குப் பக்கத்தில் வைக்கப்படும் பொருளின் நிறத்தை ஸ்படிகம் எடுத்துக் கொள்கிறது. அதே போன்று மனம் எதனோடு தொடர்பு வைக்கிறதோ அதன் தன்மையை எடுத்துக் கொள்ளும் நிலையில் இருக்கிறது. அதிலிருந்து மனதைத் தடுத்து நிறுத்துவது மிகவும் கஷ்டம். மனதின் அந்தத் தன்மை தான் பந்தத்துக்கும் காரணம். ஸ்படிகம் அருகிலுள்ள பொருளின் நிறத்தை எடுத்துக் கொண்டு தன் சொந்த தெளிந்த நிலையை மறந்துவிடுகிறது. சிவப்பு நிறமான புஷ்பம் ஒன்றை ஸ்படிகத்துக்குப் பக்கத்தில் வைத்தால் சிவப்பு நிறத்தை எடுத்துக்கொண்டு தன் சொந்த தெளிந்த நிலையை மறந்து விடுகிறது. நம்மைச் சரீரமாக அகங்கரித்து நாம் யார் என்பதை மறந்திருக்கிறோம். நம்மைச் சரீரமாக எண்ணிக்கொண்டிருப்பதில் இருந்து தான் எல்லாத் துன்பங்களும் வந்திருக்கின்றன. நம்முடைய பயத்துக்கும், கவலைக்கும், துன்பத்துக்கும், தொந்தரவுக்கும், தவறுக்கும், பலஹீனத்துக்கும், கேட்டுக்கும் நம்மைச் சரீரமயமாக எண்ணுவதே காரணமாகும். சாதாரண மக்கள் தங்களைச்சரீர மயமாகவே எண்ணி இருக்கின்றனர். பக்கத்திலிருக்கிற புஷ்பத்தின் நிறத்தைத் தன்னுடையதாகக் கருதும் ஸ்படிகம் போன்றவன் சாதாரண மனிதன். ஸ்படிகம் எப்படிச் சிவப்பு நிறமான பூ ஆகாதோ அப்படியே நாமும் சரீரங்கள் ஆகமாட்டோம்.

நாம் தியானம் தொடர்ந்து செய்து கொண்டிருக்க வேண்டும். தியானம்தான் நம்மை மெய்ப்பொருளுக்கு அருகில் எடுத்துச் செல்கிறது. மெய்ப்பொருளுக்கு அருகில் தியானம் எடுத்துச் செல்வது போன்று வேறு எதுவும் எடுத்துச் செல்லுவதில்லை.

இரண்டுபேர்கள் ஒருவருக்கொருவர் சந்திக்கும் பொழுது ''நீங்கள் உடல் நலத்துடன் இருக்கின்றீர்களா?'' என்று வினவிக்கொள்வது மேனாட்டுப் பழக்கம். இந்தியாவில் ஒருவருக்கொருவர் சந்திக்கும் பொழுது யோக க்ஷேமத்தைப் பற்றி விசாரித்துக் கொள்வார்கள். ஆத்மாவைத்தவிர உலகப்பொருள் எதை நீங்கள் சார்ந்தாலும் துன்பத்துக்கு ஆளாவீர்கள். ஆத்மாவைச் சார்ந்திருப்பதே தியானம் ஆகும். ஆத்மாவை முற்றிலும் சார்ந்திருப்பது மனதின் தூயநிலையாகும். ஆத்மாவைச் சிந்திப்பது ஆத்ம மகிமையில் மூழ்கியிருப்பது மனதுக்குப் பெருநலனைத் தருகின்றன.

உணர்ச்சி வசப்பட்டுப் பிரார்த்தனை பண்ணுவதும் இன்னும் சில சாதனை முறைகளைக் கையாளுவதும் ஆத்மாவைச் சார்ந்திருப்பதற்கு நாம் எடுத்துக்கொள்ளும் முறைகளாகும். ஆழ்ந்த பக்தி அல்லது பிரேமை பக்தியில் ஆத்மாவை முற்றும் சார்ந்திருக்கிறோம். புறப்பொருள் நம் உள்ளத்தில் பேருணர்வை எழுப்புவதாக இருந்தாலும் அப்பேருணர்வு ஆத்மாவில் மன ஒருமைப்பாட்டை உண்டு பண்ணுகிறது.

தியானத்தில் மூன்று படித்தரங்கள் இருக்கின்றன. அவை முறையே தாரணை, தியானம், சமாதி எனப்படும். முதலாவதாகத் தாரணையை எடுத்துக்கொள்வோம். ஒரு பொருளின்மீது மனோசக்தியைக் குவியச் செய்வது தாரணை எனப்படும். கண்ணாடி ஒன்றின்மீது மனதைக் குவியச் செய்வதற்குக் கண்ணாடியைத் தவிர மற்றப் பொருள்களிடமிருந்து மனதை விலக்கி எடுக்க முயலுகின்றேன். ஆனால் மனம் அலைகின்றது. அப்படி அலைவதை நிறுத்திக் கண்ணாடியின்மீது ஒருமுகப்படுவது வலுத்து வந்தால் அது தியானம் எனப்படும். இதனினும்

உயர்ந்த நிலை ஒன்றுண்டு. கண்ணுடி வேறு, நான் வேறு என்ற நிலை மாறி ஒன்றுபடுகிற நிலை உண்டாகிறபொழுது அது சமாதி எனப் படும். மனமும் கண்ணுடியும் அப்பொழுது ஒன்றுபட்டு விடுகின்றன. வேறுபாடு எதுவும் அப்பொழுது புலப்படுவதில்லை. இந்திரியங் கள் செயலை நிறுத்திவிடுகின்றன. இந்திரி யங்கள் மூலமாக வேலை செய்துகொண்டிருந்த மனோசக்திகளெல்லாம் மனதில் ஒன்றுபடுகின் றன. அப்பொழுது மனோசக்தி முழுவதும் கண்ணுடிமீது செலுத்தப்படுகிறது. மனோ சக்திக்குக் கண்ணுடி உட்பட்டதாகின்றது. இதை அனுபவத்துக்குக் கொண்டு வரவேண் டும். இந்த அரிய விளையாட்டைத்தான் யோகிகள் விளையாடுகின்ருர்கள். புறப் பொருள் ஒன்று இருப்பதாக வைத்துக்கொள் வோம். நமக்குப் புறத்தே இருக்கும் பொருள் நாம் காணும் பொருளன்று. நான் காணும் கண்ணுடி எனக்குப் புறத்தே இருக்கும் பொரு ளன்று. வெளியிலுள்ள கண்ணுடியை நான் அறிவதில்லை. அதை என்னுல் அறியமுடியாது.

புறத்தில் உள்ள ஒரு பொருள் என் மனதில் அசைவைத் தோற்றுவிக்கின்றது. உடனே என்னிடத்து எதிர்ச்செயல் உண்டாகின்றது. கண்ணுடி என்பது, வெளிப்பொருள் என் உள்ளத்தின் அசைவு ஆகிய இரண்டின் சேர்க் கையாகும். புறத்திலிருந்து வரும் செயலை X என்று வைத்துக் கொள்வோம். அகத்தி லிருந்து உண்டாகும் எதிர்ச் செயலை Y என்று வைத்துக்கொள்வோம். கண்ணுடி என்பது X Yகளின் சேர்க்கையாகும். Xஐப் பார்க்கும் போது அதைப் புறவுலகமாகக் கொள்ளுங் கள். Yஐப் பார்க்கும்போது அதை அகவுலக மாகக் கொள்ளுங்கள். எது உங்கள் மனம், எது புறவுலகம் என்பதை வேறுபடுத்திக் காண முயல்வீர்களானுல், உங்களால் வேறு படுத்திக் காணமுடியாது. நீங்களும் பிறிதொரு பொருளும் சேர்ந்ததே இவ் உலகம் ஆகும்.

மற்ருெரு உதாரணம் எடுத்துக்கொள்ள லாம். ஒரு ஏரியின் நீரின் மேல்பகுதியில் கற்களைப் போடுகின்றீர்கள். நீங்கள் போடும் ஒவ்வொரு கல்லுக்கும் எதிர்ச்செயல் உண்டு. ஏரியில் உள்ள அலைகளால் கல் மறைக்கப்படு கிறது. வெளிப்பொருள்கள் கற்களுக்கு நிகர் ஆகின்றன. மனதில் உள்ள எண்ண அலை களால் வெளிப்பொருள்கள் மறைக்கப்படுகின் றன. ஆகையால் வெளிப்பொருள்களை நாம் காண முடிவதில்லை. அலைகளைத்தான் நாம் காண்கின்ருேம்.

மனதில் எழுகின்ற அலைகள் புறவுலகில் பல பொருள்கள் தோன்றுவதற்குக் காரண மாக இருக்கின்றன. நாம் இப்பொழுது கற்பனைப் பொருள்கள் உண்மைப்பொருள்கள் என்பதைப்பற்றி விவாதம் செய்யவில்லை. பொருள்கள் புறத்தே இருக்கின்றன என் பதை உண்மை என்றே எடுத்துக்கொள்ள லாம். ஆனுல் நாம் பார்ப்பது புறத்தே உள்ள பொருள்களுக்கு முற்றிலும் வேறுபட்டவை ஆகும். புறப்பொருள்களோடு நம் மனதின் இயல்பையும் சேர்த்துத்தான் பார்க்கின்ருேம்.

புறப்பொருள்களிடத்து என் பங்கை நான் தராவிட்டால் புறப்பொருள் ஒன்றும் இருக் காது. கண்ணுடியினிடத்து என் பங்கை எடுத் துக்கொண்டால் கண்ணுடி என் காட்சியிலி ருந்து மறைந்துவிடும். அங்ஙனமே மேஜை யினிடத்து என் பங்கை எடுத்துக்கொண்டால் மேஜை என் காட்சியிலிருந்து மறைந்துவிடும். ஏனென்ருல் அவையாவும் புறப்பொருள்களும் என்பங்கும் சேர்ந்த கலவையே ஆகும். ஏரியில் கல்லை எறிந்தால் அதற்கு எதிர்ச்செயலாகக் கல்லை நோக்கி ஏரி அலையை வீசவேண்டி இருக்கிறது. பொறிகள் மூலம் வரும் உணர்ச் சிக்கெல்லாம் மனதில் எண்ண அலைகள் உண்டாகின்றன. மனத்தை உணர்ச்சி வசப் படாது கட்டுப்படுத்த முடியுமானுல், மனதை உணர்ச்சியிலிருந்து எடுத்துக்கொள்ள முடியு மானுல் அக்கணமே நாம் மனோ வேந்தர்களாகி விடுகின்ருேம். புறப் பொருள்கள் மனதில் உண்டாக்குகின்ற செயல்களுக்கு நம் பங்கைச் செலுத்தாது நாம் இருந்து பழகவேண்டும். அப்படி நாம் நம் பங்கைச் செலுத்தாவிட்டால் புற உலகம் நம்மிடத்தில் செயல்படுத்துவதை நிறுத்தித்தான் ஆகவேண்டும்.

சதா நீங்கள் பந்த பாசத்தை உண்டுபண் ணிக்கொண்டிருக்கிறீர்கள். எவ்வாறு என் பதை நான் கூறட்டுமா? உங்களுடைய பகுதியை நீங்கள் புற உலகுக்குத் தந்து கொண்டே இருக்கிறீர்கள். அதனுல் பந்தம்

என்னும் பொய்ச் சங்கிலியால் உங்களைத் தளைத்துக்கொள்கிறீர்கள். என்னைப் புறவுல கப் பொருளோடு ஒன்றுபடுத்துவதை நிறுத்தி விட்டால் நான் புறவுலகுக்குத் தரும் பங்கிலி ருந்து விலகிக்கொள்ளலாம். அப்பொழுது புறவுலகப் பொருள் மறைந்துவிடுகிறது. இதோ கண்ணுடி இருக்கிறது என்று சொல் லும் நாம் மனதை அதிலிருந்து விலக்கிவிடு வோமானால் கண்ணுடி மறைந்துவிடுகிறது. புற வுலகத்துக்கு நீங்கள் தரும் பங்கை நிறுத்தி விட்டால் நீர் மேலும் நீங்கள் நடக்கமுடியும். நீர் உங்களை முழுக அடிக்காது. நஞ்சும் உங்களை ஒன்றும் செய்யாது. எந்தக் கஷ்ட மும் உங்களுக்கு இல்லை. இயற்கையில் நிகழும் ஒவ்வொரு செயலுக்கும் நீங்கள் தரும் பகுதி பாதியாகவும், இயற்கை தரும் பகுதி பாதியாகவும் இருக்கின்றன. உங்கள் பகுதியாகிய பாதியை நீங்கள் நிறுத்திவிட் டால் புறப்பொருள் இல்லாது போய்விடும்.

ஒவ்வொரு செயலுக்கும் அதற்குச் சமமான எதிர்ச்செயல் உண்டு. ஒரு மனிதன் என்னை அடித்துக் காயப்படுத்தி விடுகிறுன் என்றுல் அதற்கு அம்மனிதனுடைய செயலும், என்னு டைய உடலின் எதிர்ச்செயலும் காரணங் களாக இருக்கின்றன. என் உடலில் தானு கவே நிகழும் செயல்களையும் கட்டுப்படுத்தக் கூடிய ஆற்றல் என்னிடத்தில் இருக்கிறது. நான் அத்தகைய ஆற்றலைப் பெற்றுவிட முடி யுமா? முடியும் என்றுதான் சாஸ்திரங்கள் கூறுகின்றன. திடீரென்று அந்த ஆற்றல் என்னிடத்தில் வெளியாகுமானுல் அதைத் தெய்வீக சக்தி என்று சொல்லுகிறேம். விஞ் ஞான முறையில் அச்சக்தியை நான் பெறு வேனுல் அதற்கு யோகம் என்று பெயர்.

மனே சக்தியைப் பயன்படுத்தி மக்களுடைய நோயைத் தீர்க்கின்றவர்களை நான் பார்த் திருக்கிறேன். அற்புதச் செயல்கள் செய் கின்றவர்கள் இருக்கிறுர்கள். நோய் குண மாகவேண்டுமென்று அவன் கடவுளைப் பிரார்த் திக்கின்றுன் என்று நாம் சொல்லுகிறேம். "அப்படிச் சொல்லுவது சரியன்று; அது மனே சக்தியினுல் நிகழுகின்றது. அவன் மனதைக் கட்டுப்படுத்தும் முறையை அறிந்திருக்கின் றுன். அவனைப்பற்றி அவனுக்குத் தெரியும்" என்று மற்றெருவன் சொல்லுகின்றுன்.

தியானத்தின் வன்மையினுல் நாம் அனைத்தை யும் பெற்றுவிடமுடியும். இயற்கையை நீ வெல்ல விரும்பினுல் அதற்குரிய சக்தியை நீ தியானத் தின்மூலம் பெற்றுவிடலாம். தற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள விஞ்ஞான உண்மை கள் யாவும் தியானப் பயிற்சியின் மூலமாகவே கண்டுபிடிக்கப்பட்டன. விஞ்ஞானிகள் இயற் கையை அறிவதில் தங்களை மறந்தார்கள். தாங்கள் எந்தப்பொருளை ஆராய்ச்சி பண்ணி ஞர்களோ, அந்தப் பொருளோடு தங்களை ஒன்றுபடுத்தினுர்கள். அப்பொழுது அந்தப் பொருளைப்பற்றிய உண்மை அவர்கள் உள்ளத் தில் தெளிவாக விளங்கியது. சில மக்கள் கடவுளின் அருளினுல்தான் உண்மையை அறிய முடியும் என்று சொல்லுகிறுர்கள். உள்ளத்தி லிருந்தோ, புறத்திலிருந்தோ திடீரென்று யாருக்கும் ஒன்றும் உண்டாகிவிடாது சூன் யத்திலிருந்து எதையும் தோற்றுவிக்க முடி யாது. நம்மிடத்தில் இருப்பதைச் சரியான பயிற்சியின் மூலம் நமக்குரியதாக்குகிறேம் என்பதுதான் உண்மை.

இயேசுநாதரின் செயல் தெய்வீகச் செயல் என்பார்கள். முற்பிறப்புகளில் நெடுங்காலம் அவர் கஷ்டப்பட்டு உழைத்திருக்கிறுர். அப் படி அவர் கஷ்டப்பட்டு உழைத்ததன் பயனே இப்பிறப்பில் அவரிடம் செயலாக வெளிப்பட் டது. தெய்வத்தின் அருளால் எல்லாம் வரும் என்று வெறுமனே இருப்பது அறி வீனம். அருள் எங்கேயோ இருக்குமானுல் அது மழைபோலப் பொழிந்திருக்கவேண்டும். யார் எந்தத் துறையில் வல்லுநராகவிருந்தார் களோ அவர்கள் கல்வியும் பண்பாடும் பெற்ற மேன்மக்களாக இருந்திருக்கிறுர்கள். திடீ ரென்று ஒன்றும் வந்து அவர்களுக்கு வாய்க்க வில்லை. யார் மூலமாவது அருள் செயல் வெளிப்படுமானுல் அது மனதில் ஏற்கனவே காரண நிலையில் இருந்திருக்கிறது. உள்ளத்தி லுள்ள அருள் சம்ஸ்காரம் அருள் ஒளியாக வெளிப்படுகிறது. அவர்கள் அருள் ஒளி பெற்ற தற்கு முற்பிறப்பில் செய்த கர்மமே காரணம். முற்பிறவியின் கர்மம் சம்ஸ்காரமாக உள்ளத் தில் பதிவாகிச் செயலாக இப்பொழுது வெளிப்படுகிறது. (தொடரும்)

# துறவு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின் சொற்பொழிவு)

(217ஆம் பக்கத் தொடர்ச்சி)

மரணத்தை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ப வன் துறவி ஆகின்றான். இவ்வுலகத்தில் நாம் செய்யவேண்டிய வேலையை விரைவில் செய்து முடித்துவிட்டு விரைவில் போகவேண்டு மென்று எண்ணுகிறவர்கள் நல்ல பக்தர்களா கிறார்கள். இன்னும் சில நாட்களுக்கு உலகில் இருந்து மற்றவர்களுக்குச் சுமையாக இருக்க வேண்டுமென்று எண்ணுகிறவர்கள் உலகப் பற்றுடையவர்களாகிறார்கள். அவர்கள் உலக மக்களுக்குத் தொல்லை கொடுத்துக்கொண்டி ருப்பார்கள். காரியம் முடிந்ததும் இவ்வுலகை விட்டுக் கிளம்ப ஆயத்தமாக ஆத்ம சாத னம்புரிகின்றவர்கள் இருக்கின்றார்கள். இதற்கு மாறாக உலகில் இருந்து இன்புற்றிருக்கலாம் என்று எண்ணுகிறவர்கள் உள்ளனர். அவர் கள் மருத்துவ உதவியை நாடுகின்றனர். அவர் களுக்கு மருத்துவமும் உதவி செய்கிறது. மருத்துவ உலகம் உலகுக்கு நலம் செய்வது போன்று கேடும் செய்துகொண்டிருக்கிறது. உலகத்திலிருந்து வெளியே அனுப்ப வேண்டி யவர்களையெல்லாம் மருத்துவ உலகம் பிடித்து வைத்திருக்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் நாள் குறித்து விரைவில் உலகத்தை விட்டு வெளியேறினார். அங்ஙனமே சுவாமி விவேகானந்தரும் வெளியேறினார். சாரதாதேவியார் இவ்வுலகத்தை விட்டு வெளி யேறத் தம்மை ஆயத்தப்படுத்தியபொழுது உற்றார் உறவினர்களையெல்லாம் பக்கத்திலி ருக்க அனுமதிக்கவில்லை. சாரதாதேவியாரைப் பார்க்கவேண்டுமென்று ஆவலோடு மாது ஒருத்தி சற்று தூரத்தில் உட்கார்ந்திருந்தாள். அன்னபூர்ணம்மா என்பது அவள் பெயர். அம் மாதுவை அருகில் வரவழைத்து "ஏனம்மா! துயரப்படுகிறாய்?" என்று சாரதாதேவியார் கேட்டார். தாயே! எங்களையெல்லாம் விட்டு நீங்கள் புறப்பட ஆயத்தமாகவிருக்கிறீர்கள். நாங்கள் உலகில் அனாதைகளாக விடப்படு வோம் என்று அம்மாது சொன்னாள். குழந் தாய்! உலகில் உனக்கு யாருமேவேற்றாரல்லர். யாவரையும் சொந்தம் பாராட்டவேண்டும். எல்லாரையும் சொந்தம் பாராட்டி நிறை வாழ்வு வாழ்ந்து வரவேண்டும் என்று சாரதா தேவியார் பகர்ந்தார்கள். தாம் கூறியபடியே சாரதாதேவியார் நிறை வாழ்வு வாழ்ந்து பிறகு அதை ஒதுக்கித் தள்ளினார். வாழவும் தெரியவேண்டும், கிளம்பிப் போகவும் தெரிய வேண்டும். இதைத் தெரிந்து கொண்டவர்கள் தாம் வாழ்வாங்கு வாழ்ந்தவர்களாகிறார்கள். உலகில் வாழ்வாங்கு வாழ்ந்திருக்கவும் தெரிய வேண்டும். செய்யவேண்டிய காரியத்தைச் செய்து முடித்தான பிறகு உலகத்தை விட்டு ஓடவும் தெரிந்திருக்கவேண்டும். உலகத்தில் வாழவும் உலகத்தை விட்டுப்போகவும் தெரிந் திருப்பவர்களே நல்ல விவேகிகளாகிறார்கள். உலகத்தை விட்டுப்போவதற்கே எண்ணமில் லாதவர்கள் வாழ்க்கைத் தத்துவம் தெரியாத வர்களாகிறார்கள். உலகத்தில் வாழ்வதற்கிடை யில் பட்டம் பதவிகளையும் ஆதிக்கத்தையும் துறக்கத் தெரிந்திருக்கவேண்டும்.

ராமன் பெரிய தியாகியாக வாழ்ந்தான். அங்ஙனமே பரதனும் தியாகியாக விளங்கி னான். கிருஷ்ணனும் தியாக புருஷனாக விருந்தார். சான்றோர்கள் தியாக வாழ்வு எது என்பதைக் காட்டித் தந்திருக்கிறார்கள். ஆனால் நாம் கட்டுண்டு கிடக்கின்றோம். உல கைப் பற்றிப் பிடித்துக்கொண்டு அதை விட்டு விட மனமில்லாதவர்களாக இருக்கின்றோம். அத்தகைய போக்குச் சரியன்று. உலகில் வாழ்ந்திருக்கவும், உலகத்தைவிட்டு விலகிக் கொள்ளவும் தெரிந்துகொண்டு வாழ்ந்திருப் பதற்கிடையில் தங்களுடைய ஜீவிதத்தை முற் றிலும் பரத்துக்கென்றே ஒப்படைப்பவர்கள் சிறந்த துறவியர்களாகின்றார்கள். அத்தகைய திருக்கூட்டத்தை நரேந்திரனைத் தலைமையாக வைத்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆயத்தப்படுத்தி னார். கிரஹஸ்த வாழ்க்கை இன்ன பாங்கில் வாழவேண்டுமென்று காட்டித் தருவதற்குக் கிரஹஸ்த சிஷ்யர்களையும் ஆயத்தப்படுத்தி னார். ஒரு பறவை பறப்பதற்கு இரண்டு சிறகுகள் அவசியமாகவிருப்பது போன்று

இல்லறம் துறவறம் ஆகிய இரண்டும் சமுதாயத்துக்கு, பறவையின் இரண்டு சிறகுகள் போன்று பயன்பட்டு வருகின்றன.

சிவபெருமான் திரிலோக குடும்பியாகவும், தியாகராஜனாகவும் விளங்குகின்றார். அவரிடத்தில் இரண்டு அம்சங்களும் நிறைநிலையில் இருக்கின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் கிரஹஸ்தராகவிருந்து கிரஹஸ்த ஆச்ரமத்தின் உச்சநிலையை வாழ்ந்து காட்டினார். அவர் துறவற நிலையிலிருந்து துறவற வாழ்க்கையின் உச்சநிலையையும் வாழ்ந்து காட்டினார். மேலும் சிறந்த துறவற சிஷ்யர்களின் கூட்டத்தையும் சிறந்த கிரஹஸ்த வாழ்வு வாழ்ந்த சிஷ்யர்களின் கூட்டத்தையும் ஆயத்தப்படுத்தினர். இத்தகைய காரியங்களை எல்லாம் முடித்துக் கொண்டு இவ்வுலகத்தைவிட்டுப் புறப்படுவதற்குத் தம்மை ஆயத்தப்படுத்தினர். தாம் உலகத்தைவிட்டு வெளியேறுவதற்கு ஆகஸ்டு பதினைந்தாம் தேதியைத் தேர்ந்தெடுத்தார். ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி அவர் உடலிலிருந்து விடுதலை அடைந்தார். ஆகஸ்டு பதினைந்தாம் தேதி நம் நாட்டுக்கு விடுதலையும் கிடைத்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் போன்று விவேகானந்தரும் ஜூலை நாலாம் தேதியைத் தேர்ந்தெடுத்து அன்று அவர் உடலிலிருந்து விடுதலை அடைந்தார். உடல் தாங்கி உலகில் வாழ்ந்திருக்கவும் தெரிந்திருக்க வேண்டும்; உரியகாலத்தில் உடலை உதறித் தள்ளிவிட்டு உலகத்தைவிட்டு வெளியேறவும் தெரிந்திருக்க வேண்டும். இந்த அரிய பாடத்தை அவர்கள் வாழ்க்கையின் மூலம் நாம் அறிந்துகொள்கின்றோம்.

இரண்டு உபமானக் கதைகள் மூலம் நல்ல துறவியர் யார்? என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்குகின்றார். சகோரபட்சி என்பது வானத்தில் வசித்திருக்கிறது. அது மழை நீரைத்தான் பருகும். அதற்குத் தாகம் தொண்டை வெடித்துப் போவதாகவிருந்தாலும் பூமியைத் தொட்ட நீரை அருந்துவதற்கு அது கீழே வராது. அது இடுகின்ற முட்டை கீழே பூமியை எட்டுவதற்கு முன்பு பொரித்து அதிலிருந்து குஞ்சு வெளிப்பட்டு அக்குஞ்சு மேலே போய் விடும். சகோரபட்சி போன்று சித்த புருஷர்கள் உலகப்பற்றில் அகப்பட்டுக்கொள்ளாது பரத்தையே நாடுபவர்களாக இருக்கின்றார்கள். அவர்கள்தாம் உலகில் அரிய பெரிய காரியங்களைச் செய்து சாதிக்க வல்லவர்களாகிறார்கள். நரேந்திரர் அத்தகைய சித்த புருஷர் கூட்டத்தைச் சேர்ந்தவராவார். இன்னொரு உபமானக் கதையின் மூலமாகவும் துறவைப்பற்றி விளக்குகின்றார். பணக்காரன் ஒருவன் விலையுயர்ந்த வைரக்கல் ஒன்றை வைத்திருந்தான். அவன் அதைத் தன் வேலைக்காரனிடம் தந்து அதற்கு விலை கேட்டு வா என்று சந்தைக்கடைக்கு அனுப்பினன். அவன் முதலில் அதைக்கத்தரிக்காய்க் கடைக்காரனிடம் எடுத்துச் சென்று காட்டினன். கத்தரிக்காய்க் கடைக்காரன் வைரத்தைப் பார்த்துவிட்டு அதற்கு இரண்டுகூடை கத்தரிக்காய் மதிப்புப் போட்டான். இவ்விஷயத்தை வேலைக்காரன் தன் எஜமானனிடம் போய்ச் சொன்னன். எஜமானன் வேறொரு கடைக்கு எடுத்துப் போய் வா என்று சொன்னன். அதை அவன் அரிசிக்கடைக்காரனிடம் கொண்டு போய்க் காட்டினன். அரிசிக்கடைக்காரன் வைரத்தைப் பார்த்துவிட்டு அதற்கு மூன்று மூட்டை அரிசி தரலாம் என்று மதிப்புப் போட்டான். வேலைக்காரன் விஷயத்தைத் தன் எஜமானனிடம் சொன்னபோது மற்றொரு கடைக்காரனிடம் கொண்டுபோய்க் காட்டு என்று சொன்னன். வேலைக்காரன் வைரத்தை ஜவுளிக் கடைக்காரனிடம் காட்டினன். ஜவுளிக் கடைக்காரன் வைரத்தைப் பார்த்துவிட்டு அதற்கு விலையுயர்ந்த ஒரு பேல் துணி தரலாம் என்று மதிப்புப் போட்டான். இவ்விஷயத்தைத் தன் எஜமானனிடம் சொன்னபொழுது வைரவியாபாரியிடம் அதைக்கொண்டுபோய்க் காட்டு என்று சொன்னன். வைர வியாபாரியிடம் காட்டியபொழுது 'இது அருமையான வைரம். இதற்கு மூன்று லக்ஷம் ரூபாய் தரலாம்' என்று வைரவியாபாரி மதிப்புப் போட்டான். வைரத்தை அவரவர் அறிவுக்கு ஏற்றபடி மதிப்புப் போட்டார்கள். கடவுள் பிரபஞ்ச வாழ்வு என்னும் வைரத்தை மக்கள் எல்லார்க்கும் தந்திருக்கின்றார். ஒருவன் நான் கூலிக்காரனாகவிருப்பேன் என்று கூலிக்காரநிலைக்கு அவ்வாழ்வுக்கு மதிப்புப் போடுகிறான். மற்றொருவன் நான் குமாஸ்தாவாகவிருப்பேன்

என்று வாழ்க்கைக்குக் குமாஸ்தா மதிப்புப் போடுகின்றான். மற்றொருவன் நான் வக்கீலாக விருப்பேன் என்று வாழ்க்கைக்கு வக்கீல் மதிப்புப் போடுகின்றான். மற்றொருவன் நான் ஒரு வைத்தியனாகவிருப்பேன் என்று வாழ்க்கைக்கு வைத்தியன் மதிப்புப் போடுகின்றான். மற்றொருவன் நான் என்ஜினியராகவிருப்பேன் என்று வாழ்க்கைக்கு என்ஜினியர் மதிப்புப் போடுகின்றான். இங்ஙனம் உலகாயதர்கள் வாழ்க்கைக்கு என்னென்னவோ மதிப்புப் போடுகின்றார்கள். வாழ்க்கையைப் பரமாத்மனுக்கு உரியதாக்கப்போகிறேன் என்று மதிப்புப் போடுபவன்தான் வாழ்க்கைக்கு உண்மையான மதிப்புப் போடுபவனாகின்றான். அவன் வைரவியாபாரிக்கு நிகராகின்றான்.

மானுடவாழ்வு கிடைத்தற்கரிய பெரியபேறு ஆகும். நமக்குக் கிடைத்துள்ள மானுடப் பிறவியை நாம் எப்படிப் பயன்படுத்துகின்றோம் என்பது கேள்வி. அந்தந்த வியாபாரிகள் வைரத்துக்கு மதிப்பு போட்டது போன்று நாம் நம்முடைய செயல் மூலம் நம்முடைய வாழ்க்கைக்கு மதிப்புப் போடுகின்றோம். மானுடப் பிறவியின் அருமையை அறிந்தவர்கள் இம்மானுடப் பிறவியைப் பகவத்காரியத்துக்காகப் பயன்படுத்துகின்றார்கள். அப்படிப் பயன்படுத்துகின்றவர்கள்தாம் மானுட வாழ்க்கையின் அருமையை அறிந்தவர்களாகின்றார்கள். அவர்கள் துறவியர்களாயிருந்தாலும், கிரஹஸ்தர்களாயிருந்தாலும் பெரியவர்களே. அவர்கள் வாழ்வாங்கு வாழத் தெரிந்து கொண்டவர்களாகின்றார்கள்.

கிரஹஸ்தாச்ரமம் எத்தகைய பாங்கில் இருந்துவரவேண்டுமென்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணரும், சாரதா தேவியாரும் வாழ்ந்து காட்டி இருக்கிறார்கள். 'பொருளிலார்க்கு இவ்வுலக மில்லை' என்பது கோட்பாடு. எனவே இவ்வுலக வாழ்வுக்குப் பொருள்தேவைப்படுகிறது. பணம் சம்பாதிக்காது இவ்வுலகில் வாழ்ந்திருக்க முடியாது என்பதே இக்காலத்தவருடைய உறுதியான நம்பிக்கை. ஆனால் சிறந்த இல்லற வாழ்வு வாழ்ந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரும் சாரதாதேவியாரும் பணத்தைத் தொடவில்லை. பணத்தைத் தொடுவதில்லை என்ற விரதமும் கொண்டிருந்தார்கள். அன்றாட வாழ்க்கைக்குத் தேவையானவை அவர்களுக்குத் தாமாக வந்து கிடைத்தன. ஆஸ்திக்யம் என்பது கடவுள் நம்பிக்கை என ஒரு கூட்டத்தினர் பொருள்படுத்துகின்றனர். அது எத்தகைய கடவுள் நம்பிக்கை என்பது தெரியுமா? என்னுடைய சம்ரக்ஷணையைப்பற்றி நான் கவலைப் படுவேனானால் என்னிடம் ஆஸ்திக்யம் இல்லை என்பது பொருள். என்னுடைய சம்ரக்ஷணை முக்கியமானதன்று. என்னுடைய வாழ்வு பரத்துக்குரிய பெருவாழ்வாகவிருக்க வேண்டுமென்பதில் கண்ணும் கருத்துமாக விருப்பேனேயானால் அது ஆஸ்திக்யம் எனப்படும். அப்படி வாழ்கின்றபொழுது உடல் சம்ரக்ஷணைக்குத் தேவையானது தானாக வந்தமைகின்றது. நாளைக்கு என்ன செய்வது? எங்கே போவது? எப்படிப் பொருள் சம்பாதிப்பது? எப்படி உயிர் வாழ்வது? என்று தன்னைப்பற்றியே எண்ணுகின்றவன் தரத்தில் மட்டமானவனாகின்றான். பரநாட்டத்தில் முற்றிலும் ஈடுபட்டுப் பரசேவையில் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டுமென்று எண்ணுபவனிடத்து ஆஸ்திக்யம் இருக்கிறது. வாழ்க்கைக்குத் தேவையான செல்வம் அத்தகையவனைத் தேடிக்கொண்டு வருகிறது. அவன் செல்வத்தைத் தேடிக்கொண்டு போகவேண்டிய அவசியமில்லை. இங்ஙனம் கடவுளை முற்றும் நம்பி வாழ்வைக் கடவுளிடத்தே ஒப்படைக்கின்றவன் அந்தண சுபாவமுடையவனாகின்றான். கடவுளையே முற்றும் சார்ந்திருப்பது அந்தணனுடைய இயல்பு. அவன் செல்வத்தைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. அவனுக்குத் தேவையானது அவனைத் தேடி வந்து கொண்டிருக்கும். இதற்குச் சிறந்த சான்றாக ஸ்ரீ ராமகிருஷ்ணரும் சாரதாதேவியாரும் இல்லற வாழ்க்கை வாழ்ந்தார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர், சாரதாதேவியார்களுடைய பிற்கால வாழ்க்கைக்குப் பயன்படும் பொருட்டு அவர்கள் பெயரில் பாங்கில் பணம் போடுவதற்கு மார்வாரி பக்தர் ஒருவர் விரும்பினர். ஆனால் அவர்கள் இருவரும் அதற்குச் சம்மதிக்க மறுத்துவிட்டார்கள். அவர்களுடைய அன்றாட வாழ்க்கைக்குத் தேவையானது அவர்களைத் தேடிவந்து கொண்டிருந்தது. விருந்தோம்பல், மக்களை நல்வழியில் செலுத்து

தல் ஆகிய செயல்களை அவர்கள் தங்கள் குடும்ப வாழ்க்கையில் செய்து வந்தார்கள். கிரஹஸ்தாச்ரமத்தைப் புனிதமானதாக்கிப் பலருக்கும் பயன்படும்படியான வாழ்வாக அதை மாற்றி அமைத்தார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர், நரேந்திரர் போன்ற இளைஞர்கள் எத்தகையவர்கள் என்பதை அவர்களைப்பற்றி அறிந்து சொல்லியுள்ளார். ''பறவை கொத்தாத கனிதான் தெய்வத்துக்குப் படைப்பதற்குரிய கனியாகிறது. உலக ஆசை என்னும் பறவையால் கொத்தப்படாத இளைஞர்கள்தாம் தெய்வத்துக்குப் படைப்பதற்கேற்றவர்களாகின்றனர்கள். நரேந்திரன் போன்றவர்கள் அத்தகைய இளைஞர்கள்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லியுள்ளார். உலக ஆசையில் அகப்பட்டுக் கொள்ளாத தூய இளைஞர்களை ஆயத்தப்படுத்தி அவர்களைத் தெய்வத்துக்கு நைவேத்தியமாக ஸ்ரீராமகிருஷ்ணர் தந்தார். அவ்விளைஞர்கள் தெய்வப் பணியில் ஈடுபட்டு அரிய பெரிய காரியங்களைச் செய்தார்கள்.

கிரஹஸ்த ஆச்ரமமும், சந்நியாச ஆச்ரமமும் கெட்டுப்போன காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தோன்றினர். அவை இரண்டும் எந்த நிலையில் இருக்கவேண்டுமென்பதை உலகுக்குக் காட்டித் தந்தார். தலை சிறந்த கிரஹஸ்தாச்ரமம் எது? தலைசிறந்த சந்நியாச ஆச்ரமம் எது? என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் காட்டித் தந்தார். கிரஹஸ்தாச்ரமம், சந்நியாச ஆச்ரமம் ஆகிய இரண்டு ஆச்ரமங்களும் ஓங்கி மேல்நிலைக்கு வந்தால்தான் புதிய சமுதாயம் உருவாகும். அவ்விரண்டு ஆச்ரமங்களையும் மேல்நிலைக்குக் கொண்டு வருவதற்கான இயக்கத்தை உண்டு பண்ணினர். ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கம் சிறிது சிறிதாக வலுத்து வருகிறது. தெய்வச் சங்கல்பத்தால் அது விரிவடைந்து கொண்டே வருகிறது. ''விரிவடைவதே வாழ்வு; சுருங்குதலே மரணம்'' என்று சுவாமி விவேகானந்தர் பகர்ந்துள்ளார். தெய்வச் சங்கல்பத்தினல் ராமகிருஷ்ணருடைய இயக்கம் விரிவடைந்து உறுதிப்பட்டுக் கொண்டே வருகிறது.

இல்லறத்தில் இருந்தாலும் சரி, துறவறத்தில் இருந்தாலும் சரி நம்முடைய வாழ்வைப் பரமனுக்குரிய பணிவிடையில் ஈடுபடுத்தினல் அது பெருவாழ்வு ஆகிறது. பக்தியை வளர்த்துப் பாரமார்த்திகப் பெருவாழ்வில் தீவிரமாக ஈடுபடும்பொழுது நாம் மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்தியவர்களாகின்றேம். மானுட ஜன்மம் என்ற வைரத்துக்கு அப்பொழுது நல்ல மதிப்புப் போட்டவர்களாகின்றேம். கிரஹஸ்தாச்ரமத்திலிருக்கிறேமா சந்நியாச ஆச்ரமத்திலிருக்கிறேமா என்பது முக்கியமானதன்று. மானுட ஜன்மத்தை எப்படிப் பயன் படுத்துகிறேம் என்பதுதான் முக்கியமானது. பாரமார்த்திகப் பெருவாழ்வில் நம்முடைய வாழ்வைப் பயன்படுத்தி வந்தால் மானுட ஜன்மத்தை நாம் நன்கு பயன்படுத்தியவர்களாகின்றேம். ஸ்ரீராமகிருஷ்ணர் சாரதாதேவியாருக்குக் கூறிய உபதேசம் ஒன்று உலகம் முழுவதுக்கும் பயன்படுகின்ற உபதேசமாக இருக்கின்றது. ஸ்ரீ சாரதாதேவியார் ஐந்து வயது சிறுமியாகவிருக்கும் பொழுதே ராமகிருஷ்ணருக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டார். மணம் முடிந்தான பிறகு சாரதாதேவியாரைப் பிறந்தகத்தில் விட்டு விட்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரத்துக்குத் தேவி வழிபாட்டுக்குச் சென்று விட்டார். தக்ஷிணேசுவரம் போவதற்கு முன்பு சாரதாதேவியாரிடம் அவர் பகர்ந்ததாவது: ''நாம் மானுடராகப் பிறந்திருப்பது கடவுள் வழிபாட்டுக்கேயாகும்.'' இந்தப் போதனை சாரதாதேவியாருடைய உள்ளத்தை ஆழ்ந்து தொட்டது. நாம் பாரமார்த்திக வாழ்வில் ஈடுபட்டு அறம் பிசகாது பெரும் வழியில் சென்று கொண்டிருப்போமேயானல் அது கடவுள் வழிபாடு ஆகிறது. நமக்கு அமைந்துள்ள தர்மத்தை முறையாகச் செய்து முடிப்போமானல் நாம் எந்த ஆச்ரமத்திலிருந்தாலும் நமக்குச் சிறப்பைத் தரும். நமக்குரிய கடமையை முறையாகச் செய்யும்பொழுது சமுதாயம் உயர்வடைகின்றது. தர்மநெறியைக் கடைப்பிடிப்பதற்கு இன்றைய நிலை பிரதிகூலமான சூழ்நிலையாக இருக்கிறது. பிரதிகூலமான சூழ்நிலையிலும்அறநெறி பிறழாது பெருவாழ்வில் ஈடுபட்டுப் பக்தியையும் ஞானத்தையும் வளர்த்து வரவேண்டும். இறைவன் பேரருளால் மக்களுக்குப் பெருவாழ்வு வாழ்வதில் சிரத்தை உண்டாவதாகுக. (முற்றும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் -119

*694.* **सागरमेखला** ஸாகரமேகலா— கடலை ஒட்டியாணமாக அணிந்திருப்பவள் என்பது பொருள்.

பூமியைச் சுற்றிலுமிருப்பது சமுத்திரம். அது ஒட்டியாணமாகஅமையுமிடத்து அம்பிகைநிலத்தைத் தன் மேனியாகக் கொண்டிருக்கிறாள் எனக் கருதவேண்டும். நிலமகளாக இருப்பவள் அம்பிகை. பிரபஞ்சம்முழுதும் அம்பிகையினுடைய ஸ்தூல தோற்றம். ஆதலால் அதில் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் அவளுடைய சொரூபமாகக் கருதுவது பொருந்தும். பிரபஞ்சம் முழுவதையும் பொருளற்ற பிரகிருதியாகக் கருதுவதற்குப் பதிலாக அம்பிகை சொரூபமாகக் கருதுதலில் பெருநலன் உண்டு. த்ருக், த்ருச்ய விவேகம் என்பது ஒரு வேதாந்தக் கோட்பாடு. த்ருக் ஆகிய ஜீவாத்மன் எத்தகைய பரிபாகமடைந்திருக்கிறானோ அத்தகைய காட்சியை அவன் புறவுலகில் காண்கிறான். இதற்கு நல்லதொரு சான்றை எடுத்துக் கொள்ளலாம். துரோணச்சாரியர் தன்னுடைய சிஷ்யர்களுக்குப் பயிற்சி கொடுத்தான பிறகு அவர்களுள் இரண்டு பேரைத் தேர்ந்தெடுத்துப் பரீக்ஷை ஒன்று வைத்தார். கௌரவர்களுள் மூத்தவனாகிய துரியோதனனுக்கு உத்தரவு ஒன்றைக் கிளப்பினர். இவ்வுலகில் தேடிப்பார்த்து நல்லவன் ஒருவனைக் கொண்டுவா என்பது உத்தரவு. உத்தரவுப்படி நல்லவனைத்தேடி அவன் சென்றான். பிறகு பாண்டவர்களுள் மூத்தவனாகிய யுதிஷ்டிரனிடம் ஆச்சாரியர் மற்றோர் உத்தரவைக் கிளப்பினர். இவ்வுலகில் தேடிப்பார்த்துக் கெட்டவன் ஒருவனைக் கொண்டுவா என்பது அந்த உத்தரவு ஆகும். இருவரும் அவரவருக்கு இட்டஆணையை நிறைவேற்ற உலகில் தேடித்திரிந்தனர். துரியோதனன் திரும்பி வந்து இவ்வுலகில் நல்லவனேயில்லை என்று இயம்பினன். யுதிஷ்டிரன் திரும்பி வந்து இவ்வுலகில் கெட்டவனே இல்லை என்று தெரிவித்தான். இவ்விருவரும் ஒரே ராஜ குடும்பத்தைச் சேர்ந்த தாயாதிகள். ஒரே ஆச்சாரியரிடம் பயிற்சி பெற்றவர்கள். ஒரே உலகினுள் தேடிப்பார்த்தார்கள். ஒருவனுடைய காட்சியில் உலகில் நல்லவன் இல்லை. மற்றவனுடைய காட்சியில் உலகில் கெட்டவன் இல்லை. அப்படியானால் நலனும் கேடும் எங்கே உள என்பது கேள்வி. ஒவ்வொரு மனிதனும் மனதில் எத்தகைய பரிபாகம் அடைந்திருக்கிறானோ அத்தகைய காட்சியையே புற உலகில் அவன் காண்கிறான். மனது திருந்தியமைவதற்கேற்ப உலகின் காட்சியும் திருந்தியமைகிறது. மனம் முற்றிலும் மாசற்றதாகுங்கால் அகம் புறம் ஆகிய எங்கும் பராசக்தியின் சாந்நித்தியமே காட்சியளிக்கிறது. மனதைத் திருத்தியமைப்பதற்கு உற்ற உபாயங்களுள் தென்படுகின்ற யாவையும் தேவியின் சொரூபங்களாகப்பாவிப்பது சிறந்த ஆத்ம சாதனமாகும். உண்மையில் தோற்றத்தில் உள்ள யாவும் அன்னையின் சொரூபங்களே. மனத்துக்கண் மாசுபடிந்திருப்பவர்கள் அவரவர் படைத்துள்ள மாசுக்கேற்ற காட்சியைப் புறத்தில் காண்கின்றனர். அகத்தில் மனிதன் திருந்தியமைந்தால் புறத்தில் மெய்க்காட்சி புலனாகிறது. அங்ஙனம் மனதைத் திருத்தியமைப்பதற்குக் காண்கின்ற அனைத்தையும் அம்பிகை சொரூபங்களாகக் கண்டுபழகுதல் வேண்டும் என்னும் கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது.

*695.* **दीक्षिता**— தீக்ஷிதா —ஞானதீட்சை அளிப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உலகிலுள்ள சமயாச்சாரியர்கள் அவரவருடைய சம்பிரதாயங்களுக்கேற்ற மந்த்ரங்களைச் சிஷ்யர்களுக்குத் தீட்சை பண்ணி வைக்கிறார்கள். அது உலக நடைமுறைக்கு ஏற்ற சமய சேவையாகும். அதில் ஓரளவு பயன் உண்டு. ஆனால் அம்பிகையின் பாங்கு அத்தகையதன்று. அந்தந்த ஜீவாத்மாவுடைய பரிபாகத்துக்கேற்ற மந்த்ரத்தை அம்பிகை உள்ளத்தினுள்ளே வீற்றிருந்துகொண்டு விளக்கியருள்கின்றாள். கிருஷி சாஸ்திரத்தில் பயிற்சி நிறைந்துள்ள நிபுணன் ஒருவன் பூமிஒன்றை ஆராய்ந்தால் அது எத்தகைய சாகுபடிக்குப் பொருந்தியது என்பதை அவன் கண்டு கொள்வான். முறையான சாகுபடியிலும் அவன் நல்ல ஊதியம் பெறுவான். கிட்டத்தட்ட கிருஷி நிபுண

னுடைய பாங்குக்கேற்றது மந்த்ர தீட்சை. ஒவ்வொரு ஜீவாத்மனும் ஒவ்வோர் ஓசை வடிவினன் என்பது இயற்கைத் தத்துவம். இதை அனுசரித்தே பண்டங்களுக்குப் பதார்த்தம் என்னும் நாமம் வந்தது. பதமும் அதன் அர்த்தமும் சேர்ந்து பதார்த்தம் ஆகிறது. ஜடப் பொருள், சேதனப் பொருள் ஆகிய யாவுக்கும் உற்ற ஓசை உண்டு. ஓசையின் புறத்தோற்றமே பிரபஞ்சத்தில் யாவுமாக அமைந்திருக்கிறது. ஓர் ஆத்மசாதகனுடைய அமைப்பு எத்தகைய ஓசையை உடைத்திருக்கிறதோ அந்த ஓசையைச் செப்பனிடுவதற்கு வந்து வாய்க்கிற சப்தமே அவனுக்குப் பொருத்தமான மந்த்ரமாகிறது. இக்கோட்பாட்டைச் சமயாச்சாரியர்கள் அறிந்துகொள்ளமாட்டார்கள். மற்றுத் தீர்க்கதரிசிகளுக்கு இக்கோட்பாடு நன்கு விளங்குகிறது. தீர்க்கதரிசிகளோ உலகில் அரியதிலும் அரியதாக அமைந்திருக்கிறார்கள். ஆதலால் ஆத்ம சாதகர்கள் மந்த்ர தீட்சை பெறுவதற்குச் சமயகுருமார்களை நாடிப் போவது பொருந்தாது. பேரார்வத்துடன் அன்னவர்கள் உள்ளத்தினுள்ளே வீற்றிருக்கின்ற அம்பிகையைச் சரண்புகுதல் வேண்டும். அம்பிகையின் உபாசனை வலுப்பதற்கேற்ப ஆத்ம சாதகனுடைய அந்தக்கரணம் சுத்தியடைகிறது. சுத்தியடைந்த அந்தக்கரணத்தில் அம்பிகையின் அருள் மந்த்ரமாக எதிரொலிக்கிறது. அந்த எதிரொலி அனாகத தொனியின் ஒரு கூறு ஆகும். பிழை போகாது அந்தந்த ஆத்ம சாதகனுக்கேற்ற மந்த்ரம் மனதில் எதிரொலிக்கச் செய்பவள் அம்பிகை. அவளுடைய அருள் பிழைபோகாது. சாதகனுடைய முன்னேற்றத்திற்கு ஏற்றவாறே அது வந்து அமைகிறது. ஆதலால் அம்பிகைக்கு 'தீக்ஷிதா' என்னும் நாமம் வந்து அமைந்துள்ளது.

*696.* **दैत्यशमनी** தைத்யசமனீ — தைத்யர்களைத் துடைத்துத் தள்ளுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அசுரர்களுக்குத் தைத்யர்கள் என்பது மற்றொரு பெயர். அசுரர்களுக்கு முன்மாதிரியாயிருப்பவன் பண்டாசுரன். துஷ்டத்தனமே வடிவெடுத்திருப்பது அசுரனுடைய பாங்கு. துன்மார்க்கத்தில் போவதே அவனுடைய இயல்பு. உயிர்களைத் துன்புறுத்துதலே அவனுக்குப் பொழுதுபோக்கு. அவனால் தாக்கப்பட்டு மன்னுயிர்கள் பெருந் துன்பத்துக்கு ஆளாகின்றபொழுது அதைப் பார்த்து அவன் முற்றிலும் இன்புற்றிருக்கிறான். ஓர் அரக்கன் நல்லார்கள் பலருக்குப் பாதகம் பண்ண வல்லவனாயிருக்கிறான். அன்னவனை அடக்கியாளவோ, மீளவோ நல்லார்களுக்கு இயலுவதில்லை. அவர்கள் பெரும்பாலும் அரக்கர்களால் படுகிற வேதனைகளைச் சகித்துக் கொண்டு நன்னெறியில் நிலை நிற்கின்றனர். அப்படி ஆதிக்கம் செலுத்துகிற அரக்கர்களுக்கும் அழிவுகாலம் அணுகுகிறது. கிருபை கூர்ந்து அம்பிகை அத்தகைய அசுரர்களைத் தக்க காலத்தில் சம்ஹாரம் செய்து ஒதுக்குகின்றாள். பிரபஞ்சத்தில் இந்நிகழ்ச்சி சர்வகாலமும் நிகழ்ந்து வருகிறது.

புறவுலகுக்கு நிகராக ஒவ்வொரு ஜீவனுடைய அமைப்பிலும் நலனும் கேடும் அமைந்திருக்கின்றன. இந்த இரண்டு இயல்புகளுக்கிடையே மனத்தகத்துப் போராட்டமும் நிகழ்ந்து வருகிறது. சன்மார்க்கத்தில் தீவிரமாக ஈடுபட்டு மந்திரத்தை முறையாக உச்சரித்து வருகின்ற ஆத்மசாதகன் தன் உள்ளத்திலே உள்ள கெட்ட இயல்புகளை அதிவிரைவில் ஒதுக்கித் தள்ளுகிறான். ஆக, அகம் புறம் ஆகிய இரு உலகிலும் அசுர ஆதிக்கம் ஓங்குகிறது. பிறகு அது ஒழித்துத் தள்ளப்படுகிறது. சர்வகாலமும் இத்தகைய நிகழ்ச்சி நடைபெற்று வருவதால் அம்பிகை தைத்ய சமனீ என்னும் நாமம் படைத்துள்ளாள். அவளைச் சரண்புகுபவர்களுக்கு அசுர இயல்பை ஒதுக்குவது மிக எளிதாகிறது.

*697.* **सर्वलोकवशंकरी**— ஸர்வலோக வசம்கரீ—உலகங்களனைத்தையும் தன் வசம் ஆக்குபவள் என்பது இதன் பொருள்.

ஜீவகோடிகளத்தனையும் இச்சா சுதந்திரம் படைத்திருப்பவைகளாகக் காட்சி கொடுக்கின்றன. எந்திரம் ஒன்று யந்த்ரீ இயக்குவிக்கிற பிரகாரம் இயங்குகிறது. அதற்கு இச்சா சுதந்திரம் இல்லை. ஆனால் ஈ ஒன்றுக்கு இச்சா சுதந்திரம் இருப்பதாகத் தென்படுகிறது. வேண்டுமென்கிற இடத்துக்குப் பறந்து செல்ல அதற்கு உரிமையுண்டு. அந்த ஈயும் அங்ஙனமே செய்கிறது. அதே

பாங்கில் ஸ்தாவர ஜங்கமங்களாகிய உயிர் வகைகளனைத்தும் தம் தம் போக்கில் தோன்றி இருந்து ஒடுங்குகின்றன என்னும் காட்சியை நாம் காண்கின்றோம். ஆனால் உண்மையில் இத்தனை கோடி உயிர்வகைகளுக்கும் பூரண இச்சா சுதந்திரம் கிடையாது. அதற்கு மற்றொரு சான்று எடுத்துக்கொள்வது அவசியமாகிறது. மானுடவர்க்கம் மற்ற உயிர்வகைகளைவிட அதிகமாக இச்சா சுதந்திரம் உடைத்திருப்பதாகத் தெரிகிறது. ஆயினும் அந்த மானுட இனத்துக்கும் தனக்குத்தானே உண்டு பண்ணிக் கொண்டுள்ள கட்டுமானங்களும், தெய்வாதீனமாக வந்துள்ள கட்டுமானங்களும் இருக்கின்றன. தனக்குத்தானே உண்டு பண்ணியுள்ள கட்டுமானத்துக்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். மானுடன் ஒருவன் தனியாக இருக்கிறபொழுது வேண்டியபடி உடையணிந்திருக்க அல்லது உடையில்லாது நிர்வாணமாயிருக்க அவனுக்கு உரிமையுண்டு. ஆனால் சமுதாயத்தில் பழகுகின்ற பொழுது நியதிப்படி உடையணிந்திருக்க அவன் கடமைப்பட்டிருக்கிறான். தனக்குச் சொந்தமாயுள்ள பொருளை அவன் வேண்டியவாறு பயன்படுத்தலாம், அல்லது பாழ்படுத்தலாம். மற்றவர்கள் யாரும் அதில் தலையிடுவதில்லை. ஆனால் பிறர் பொருளை எடுத்து அவன் முறைதவறிக் கையாண்டால் சமுதாயம் அவன் மீது நடவடிக்கை எடுக்கும். அத்துறையில் அவனுக்கு இச்சா சுதந்திரம் இல்லை. இனி தெய்வாதீனமாக அமைந்துள்ள வாழ்க்கை முறையை ஆராய்ந்து பார்ப்போம். சில மணிநேரம் உறங்குதலில் மனிதனுக்கு இச்சா சுதந்திரம் உண்டு. ஆனால் தொடர்ந்து பல நாட்களுக்கு உறங்குவதற்கு அவனுக்குச் சுதந்திரம் இல்லை. எவ்வளவுதான் முயன்றாலும் ஓரளவுக்குமேல் தூங்குதற்கோ, விழித்திருப்பதற்கோ அவனுக்கு உரிமையில்லை. ஆங்குத் தெய்வத்தின் ஆதிக்கம் நிறைவேறுகிறது. ஜனனமரணம் மனிதன் விரும்பியவாறு நிகழ்வதில்லை. அச்செயல்கள் தெய்வாதீனமாக நிகழ்கின்றன. உற்றார் உறவினர் விஷயத்தில் மனிதன் விருப்பம்போல் தனக்குத் தானே அமைத்துக்கொள்ள முடியாது. தெய்வாதீனமாக அமைந்துள்ள சுற்றத்தோடு ஒட்டி உறவாட அவன் கடமைப்பட்டிருக்கிறான். இதே பாங்கில் உயிர்களனைத்துக்கும் இன்றியமையாத சூழ்நிலைகளும் வாழ்க்கை முறைகளும் வாய்ப்புகளும் அமைகின்றன. அமைந்தவைகளை முறையாகப் பயன்படுத்தும்படி இயற்கை தூண்டுகிறது. முறைபிறண்டால் உயிர்களனைத்தும் துன்பத்திற்கு ஆளாகின்றன. ஆக, வாழ்க்கை முறையை எல்லா உயிர்வகைகளுக்கும் ஏற்ற பாங்கில் அன்னை பராசக்தி வகுத்து வைத்துள்ளாள். அவளுடைய அமைப்பைச் சரியாகப் பயன்படுத்துவது தர்மம். அந்த அமைப்பினின்று பிசகுவது அதர்மம். பிசகிய பொழுதெல்லாம் துன்பம் வாய்க்கிறது. துன்புறுத்தி உயிர்வகைகள் நல்வாழ்வில் நடாத்தப்படுகின்றன. அது அம்பிகையினுடைய ஆட்சிமுறை. அவளுடைய ஆட்சிமுறைக்கு வசப்பட்டு உயிர்களனைத்தும் படிப்படியாக மேல்நிலை எய்தி வருகின்றன. இந்த அமைப்பைச் சரியாகப் பொருள்படுத்த அறிந்து கொள்ளுகிற மெய்ஞ் ஞானிகளுக்கே அம்பிகை எவ்வளவு அற்புதமாகச் சர்வலோகவசம்கரியாக இருந்து வருகிறாள் என்பது விளங்கும். ஞானியர்களுடைய உள்ளத்தில் உதிக்கின்ற இச்சைகளும் அன்னை பராசக்தியின் பிரபஞ்ச பெருந்திட்டமும் ஒன்றேடொன்று ஒத்திருக்கின்றன. அதற்கேற்ற காரணமும் உளது. ஞானியர்களின் உள்ளத்தினின்று அகங்காரமும், மமகாரமும் அறவே ஒதுக்கப்பட்டிருக்கின்றன. எங்கு அகங்காரமும் மமகாரமும் அழிந்துபட்டுப் போயிருக்கின்றனவோ ஆங்கு அம்பிகையின் அருள் ஒன்றே இலங்கிக்கொண்டிருக்கிறது. ஆதலால்தான் அம்பிகையினுடைய திருவுள்ளத்துக்கும் ஞானியருடைய திருவுள்ளத்துக்குமிடையில் வேற்றுமையில்லை. எந்தச் சங்கல்பம் ஞானியர்களுடைய உள்ளத்தில் உதயமாகிறதோ அந்தச் சங்கல்பமே அம்பிகையின் பெருந்திட்டமாகிறது. அடுத்தபடி அவள் திட்டம் எதுவோ அதுமட்டுமே ஞானியர்களுடைய உள்ளத்தில் உருவெடுக்கிறது. ஆதலால் ஞானியர்களைக்கருவிகளாகக்கொண்டு நிகழ்கிறநிகழ்ச்சிகளெல்லாம் அம்பிகையின் பெருந்திட்டமாம். அவளுடைய திட்டத்துக்குட்பட்டு வாழ்ந்து வருவதும் அவளுடைய வழிபாடு ஆகும்.

---

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (171)** *மக்கள்படும் துயரங்களுக்கெல்லாம் காரணம் அக்ஞானம் என்கின்றனர். அது எப்படி என்பது விளங்கவில்லை.*

மனிதன்படும் துயரங்களுக்கு அடிப்படையான காரணங்கள் சில உள. அவைகளை ஆராய்வோம். நோய்வாய்ப்படுவது உடலின் கூறு. அதை யாரும் தவிர்க்க முடியாது. நோய்க்கு ஆளாயிருப்பதைக் குறித்துப் படாத பாடுபடுபவர்கள் உண்டு. வந்த நோயை அமைதியாகச் சகித்துக் கொள்பவர்கள் இருக்கிறார்கள். சகித்துக் கொள்கிறவன் அறிவு படைத்தவன். உடலுக்கு நோய் வருவது இயல்பு என்று அவன் அதை அமைதியாக ஏற்றுக்கொள்ளுகிறான், சகித்துப் பழகுவதால் அவன் மன உறுதி பெறுகிறான். இன்னும் நல்ல விவேகம் படைத்தவர்கள் உடலுக்கு வந்த நோயை உள்ளத்தில் வாங்கிக் கொள்வதில்லை. உடலின் வேதனையைப் பொருள் படுத்தாதிருப்பது அவர்கள் பெறுகிற இலாபமாகிறது. நோயைக் குறித்துப் பெருமிதமாக வருந்துபவன் நஷ்டப்பட்டவனாகிறான். அது அக்ஞானத்தின் விளைவு.

ஏழ்மையைக் குறித்து வருந்துகிறவர்கள் உலகில் ஏராளமாக உண்டு. கடவுள் தங்களைப் பரம ஏழைகளாகப் படைத்து விட்டார் என்று அன்னவர்கள் மனம்நொந்து கொண்டிருக்கின்றனர். அதற்கு மாறாகவேறுசில விவேகிகள் தங்களுக்கு வாய்த்துள்ள ஏழ்மையை அமைதியாக ஏற்றுக்கொள்கின்றனர். கைவசமுள்ள பொருளுக்கேற்ப வாழ்க்கையை மிகச் சிக்கனமாக நடாத்துகின்றனர். அதற்கிடையில் மேலும் தேவையான செல்வத்தைச் சேகரிப்பதற்கு முறையாகப் பாடுபடுகின்றனர். மனதில் அவர்கள் எப்போதும் அமைதியாகவும், ஊக்கத்துடனும் இருக்கின்றார்கள். இந்நிலை அறிவின் விளைவு. தெய்வத்தையும் தங்கள் தலைவிதியையும் நொந்துகொள்கிறவர்கள் படுகிற துயரங்களெல்லாம் அக்ஞானத்தின் விளைவு.

ஒருவரை ஒருவர் போற்றுவதும் தூற்றுவதும் உலக இயல்பு. புகழ்ச்சியில் மகிழ்ந்திருப்பவர்கள் இகழ்ச்சியில் துன்புறுவது திண்ணம். மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு புகழ்ச்சியை நாடுகின்றானே அவ்வளவுக்கவ்வளவு இகழ்ச்சி வந்து வாய்த்த காலை அவன் பெருந் துயரத்திற்கு ஆளாவது திண்ணம். புகழ்ச்சியை நாடுவது அக்ஞானத்தின் விளைவு. நெறிபிறழாதுவாழ்பவனுக்குப் புகழ்ச்சி தானாக வருகிறது. ஆனால் அதை அவன் பொருள் படுத்துவதில்லை. நல்லவர்களை நிந்திப்பதும் உலகின் போக்கு. நிந்தை, ஸ்துதி ஆகிய இரண்டும் பொருளற்றவைகளாக எளிதில் வரவும் போகவும் செய்கின்றன என்பதை அறிந்திருப்பவன் அறிஞன். இரண்டிலும் கட்டுப்படாது நல்வாழ்வில் நிலைத்திருப்பதால் அவனுக்கு ஒருபொழுதும் துன்பமில்லை. இதற்கு மாறாகக் கீர்த்திக்கு அடிமைப்பட்டிருப்பவன் அபகீர்த்தியில் அல்லல்படுவது திண்ணம். நடுநிலை ஞானத்தின் விளைவு; அல்லல் படுவது அக்ஞானத்தின் விளைவு.

எடுத்த காரியங்களையெல்லாம் ஒருவன் வெற்றிகரமாக நிறைவேற்றி இன்புற்றிருக்கிறான். மற்றொருவன் ஒவ்வொரு முயற்சியிலும் தோல்வியுற்றுத் துன்பத்துக்கு ஆளாகிறான். முயற்சியை முறையாகக் கையாளுவது அறிவின் விளைவு. முயற்சியில் மடத்தனமாக மூழ்குவது அறிவின்மையின் விளைவு. நுண்ணிய கருமம் எண்ணித் துணிக என்பது கோட்பாடு. நல்லறிவு படைத்திருப்பவனுக்கு ஒருசெயலின் உட்பொருள் உள்ளபடி விளங்குகிறது. அதை முறையாக நிறைவேற்றி அவன் இன்புறுகிறான். மற்றவன் முறைவழுவித் துன்புறுவது அக்ஞானத்தின் விளைவு.

சாவைக்குறித்துத் தேம்பி அழுவது உலகின் இயல்பு. வாழ்விலே பெரும்பற்று வைத்திருப்பவர்களெல்லாரும் சாவுக்கு அஞ்சுகின்றனர். மிகைப்பட்ட பற்றுதல் வாழ்வின்மீது வைப்பதும், வரம்பு கடந்த வேதனை மரணத்தை முன்னிட்டு வருவதும் ஆகிய இவ்விரண்டு செயல்களும் அக்ஞானத்தின் விளைவாம். ஞானம் அல்லது நல்லறிவு படைத்திருப்பவன் வாழ்ந்திருப்பதையும், மடிந்து போவதையும் சமனாகக் கருதுகிறான். அல்லும் பகலும் மாறி மாறி வருவது போன்று பிறப்பும் இறப்பும் மாறி

மாறி வருகின்றன என்பதை நல்லறிஞன் உள்ளபடி அறிந்து தேர்ந்திருக்கிறான். வாழ்வதையும், சாவதையும் அவன் சமனாகக் கருதுவதால் துன்பத்துக்கு ஆளாவதில்லை. வாழ்வு மட்டும் வேண்டும் மரணம் வேண்டாம் என்று எண்ணுவது அக்ஞானத்தின் விளைவு. அன்னவன் படைத்துள்ள அக்ஞானத்தை முன்னிட்டு அவன் துன்பப்பட்டேயாக வேண்டும்.

நல்லறிவு படைத்திருக்கிறவன் அமைதியுற்றிருந்து பயன்படுகிற பெருவாழ்வு வாழுகிறான். அறிவிலியோ ஓயாது துன்பத்துக்கு மேல் துன்பத்துக்கு ஆளாகிறான்.

கேள்வி: (172) **புத்தர் இல்லறத்தை வெறுத்துத் துறவியானார். இராமகிருஷ்ண பரமஹம்சர் இல்லறத்திலிருந்துகொண்டே துறவு வாழ்க்கை மேற்கொண்டார். எதுபொருத்தமானது? காரணம் என்ன?**

இல்லறம் பெரியதா? துறவறம் பெரியதா? என்னும் கேள்வி காலமெல்லாம் மக்களுக்கிடையில் எழுந்துகொண்டிருக்கிறது. பண்டைக்காலத்தில் இக்கேள்வி எழுந்தது. இக்காலத்தில் இது எழுந்துகொண்டிருக்கிறது. எதிர் காலத்திலும் இக்கேள்வி எழுந்துகொண்டேயிருக்கும். ஆதலால் இது ஒரு நிரந்தரப் பிரச்சினையாகும்.

புத்தர் பெம்மான் துறவியாகாது இல்வாழ்க்கையிலேயே ஈடுபட்டிருந்தால் அவர் ஒரு சிற்றரசனாக இருந்து பிரபஞ்ச வாழ்க்கையை அமைதியாக முடிவுக்குக் கொண்டுவந்திருப்பார். உலகமும், அவரைப்பற்றி ஒன்றும் அறியாதிருந்திருக்கும். ஆனால் அவர் துறவறத்தை மேற்கொண்டது உலகம் செய்த பாக்கியமாகும்.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று

என்ற பொய்யாமொழிக்கு அவரே சான்றாகிறார். புத்தருடைய துறவு என்றென்றும் உலகமக்கள் உள்ளத்தில் அருள் நாட்டத்தை ஓங்குவிக்கும். இல்லறம் துறவறமாகிய இரண்டு அறங்களும் மேலானவைகளே என்பதை உலக மக்களுக்கு அறிவித்தல் பொருட்டு ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்சர் இரண்டு அறங்களையும் தீவிரமாகக் கடைப்பிடித்தார். உண்மையை ஆராயுங்கால், அவர் பெயரளவில் ஒரு இல்லறத்தார் ஆகிறார். உலக ஆசைகளனைத்தையும் அறவே ஒதுக்கித்தள்ளுதல் துறவறம். அத்தகைய துறவறத்தைத்தான் ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்சரும், சாரதாதேவியாரும் வாழ்ந்து காட்டினார்கள். அவர்கள் வாழ்ந்தது போன்று வாழ்ந்து வந்தால் இல்லறம் பெரியதே.

பரமஹம்சர் வாழ்ந்த முறையில் இல்லறத்தைக் கடைப்பிடிக்கச் சிலர் முயன்று வருகின்றனர். பின்பு அவர் ஆயத்தப்படுத்திய துறவி வேந்தன் விவேகானந்தரைப் பின்பற்றிக் கணக்கற்ற துறவியர்கள் இன்று உலகெங்கும் தோன்றியிருக்கின்றனர். இத்துறவியர்களோடு சீர்தூக்கினால் இல்லறத்தார்கள் நிச்சயமாகவே இரண்டாந்தர இடம் பெறுகின்றனர். உலகுக்கு உண்மையான நன்மை துறவறத்தினின்றே உருவாகிறது. பண்படாத மற்றவர்களுக்கு நல்லறமாகிய இல்லறம் யாண்டும் இரண்டாவது இடம் பெறும். வள்ளுவர் வாக்கே இதற்குச் சான்றாகிறது. இல்லறத்தாரைக் குறித்து அவர் இயம்பியபொழுது 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப் படும்' என்றார். துறவறத்தைக் குறிப்பிடுகின்றபொழுது 'யான்எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்' என்றார். ஆஸ்ரமங்களுள் முடிந்த நிலையிலிருப்பது துறவறம். பிரம்மச்சரிய ஆச்ரமம், கிருஹஸ்த ஆச்ரமம், வானப்பிரஸ்த ஆச்ரமம், சந்நியாச ஆச்ரமம் என்ற நான்கு ஆச்ரமங்களுள் கிருஹஸ்த ஆச்ரமம் நீங்கலாக ஏனைய மூன்றுக்கும் புலனடக்கம் இன்றியமையாதது. கிருஹஸ்தனுக்குத் தாற்காலிகமாகப் போக வாழ்வுக்கு அனுமதி தரப்படுகிறது. அதை அவன் அடக்கத்துடன் அனுஷ்டிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். அதிவிரைவில் அவன் வானப்பிரஸ்த ஆச்ரமத்தில் பிரவேசிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். இந்நியதிகளினின்றே சந்நியாச ஆச்ரமம் ஏனைய மூன்று ஆச்ரமங்களைவிட மேலானது என்பது வெளிப்படை. உலகத்தவர்கள் எல்லார்க்கும் ஒரே பாங்கில் பணிவிடை பண்ணுவது துறவி ஒருவனுக்கே சாலும். உலகச் சரித்திரம் இதற்குச் சான்றாகிறது.

# அறப்பணி எது?

(சுவாமி ஸதானந்தர்)

வியாசர் ஒருநாள் ஆழ்ந்த தியானத்தி லிருந்தபோது அவருடைய மனம் ஏனோ சஞ்சலமடைந்தது. அவர் ஞானக்காட்சியில் எதிர்காலம் இருண்டு தென்பட்டது. கலி காலத்தில் மக்கள் சுயநலத்தாலும், உலக இன்ப ஆசையாலும், அசுர குணங்களாலும் பிடிக்கப்பட்டு ஓயாத தொல்லைக்கு ஆளாவார் கள், துன்புறுவார்கள் என்று அவர் மனதில் பட்டது. அவர்களைக் குறித்து அவர் வருத்த முற்றார். அதற்குப் பரிகாரமாக ஏதாவது செய்துவைக்க வேண்டும் என்று கருதினர். வேதங்களை நான்காகப் பிரித்து ஒழுங்குபடுத் தினர். மகாபாரதம் எழுதினர். பதினெட்டுப் புராணங்களையும், பாகவதத்தையும் இயற் றினர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் இது போன்ற சம்பவம் ஒன்று நடந்தது. சேக்கிழார் பெரு மான் பெரியபுராணம் இயற்றத் தூண்டப்பட்ட தற்கு ஒரு சம்பவம் சொல்லப்பட்டிருக்கிறது. நாட்டில் செல்வச் செழிப்பு இருக்கிறது,மக்கள் சுபிக்ஷமாக வாழ்கிறார்கள். போகத்திலும் களி யாட்டத்திலும் மிகைபட ஈடுபட்டு வாழ்கிறார் கள். இந்தநிலைமை மந்திரிகளுக்கும் அரசனுக்கும் கவலையை உண்டாக்கிற்று. ஏழை ஒருவன் முயற்சியால், புண்ணியபலனால் செல்வந்தன் ஆனான். அவன் சந்ததியினரோ படிப்படியாகச் செல்வச் செழிப்பில் மூழ்கிப் போகத்தில் ஈடு பட்டு முயற்சி, திறமை இன்றி நாளடைவில் க்ஷீணதசை, ஏழ்மைக்கு ஆளாகிறார்கள். இதை நாம் அன்றாட வாழ்க்கையில் பார்க்கிறோம். அதேபோன்று ஒரு நாடு முழுவதும் ஆகிவிடு கிறது. மந்திரிகளும் அரசனும் ஆலோசித்து மக் கள் மனதைப் பக்திவழியில் திருப்பிவிடுதலே அதற்கு உற்றவழி என்று தீர்மானித்தார்கள். சேக்கிழார் பெருமான் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வாழ்க்கைச் சிறப்பை மக்கள் மனதில் பதியச் செய்யவேண்டும் என்று சொன்னார். அவரையே திருத்தொண்டர் புராணத்தை இயற்றி அருளுமாறு அரசன் வேண்டினான். அவரும் க்ஷேத்திர யாத்திரை செய்து விவரங்களைச் சேகரித்துக் கொண்டு தில்லையம்பதியை அடைந்தார். நடராஜப் பெருமானை வேண்டி நின்றார். இறைவனும் கருணை கூர்ந்து 'உலகெலாம்' என்று அடி யெடுத்துக் கொடுத்தார். இறைவன் கையில் கருவியாக இருந்த சேக்கிழார் அவர் பாடுவித்த பிரகாரம் பெரியபுராணத்தைச் செய்து முடித்தார். அது மக்கள் மனதை இறைவன் பால் திருப்பியது.

இதே போன்ற சூழ்நிலையில் இப்போது நாம் வாழ்ந்து வருகிறோம். மக்களின் பொதுநன்மை களைக் கவனிக்க, விருத்தி செய்ய, பாதுகாக்க அரசாங்க அமைப்பு ஏற்பட்டது. முன்காலத் தில் அரசர்கள் முனிவர்களின் ஆலோசனைப் படி நற்கர்மங்கள் செய்தார்கள். அக்கால சூழ்நிலை, வசதிகளுக்கு ஏற்பக் கல்விமுறைகள் இருந்தன. துறவியர்கள் நடமாடும் கல்வி ஸ்தாபனம் போன்று இருந்தார்கள். மறைந் தும், பயன்படாமலும் குவிந்திருந்த செல் வத்தை அரசர்கள் வெளிக்கொணர்ந்து பொது நன்மைக்குப் பயன்படுத்தினார்கள். ஆலயங்கள் கட்டினார்கள்.

யக்ஞம், வேள்வி, யாகம், இச்சொற்கள் எல்லாம் ஒரே பொருள் கொண்டவை. நற் கர்மங்கள், நல்ல உணர்வுகள், நல்ல மனப் பான்மை, நல்ல இனிய சொல் ஆகிய திரி கரண செயல்களே இச்சொற்களின், கிரியை களின் தாத்பரியம், அடிப்படைப் பொருள் ஆகும். பூஜா திரவியங்கள், கிரியா விசே ஷங்கள்,மந்திர உச்சாரணம் ஆகியவைகளோடு கூடிய குறிப்பிட்ட சடங்குகளை மட்டும் நாம் யாகம் என்று கருதி வருகிறோம். இவை யாகத்தின் துணைப் பொருள்களேயன்றி இவையே வேள்வி ஆகிவிடா என்பதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண் டும்.யுதிஷ்டிரரின் ராஜசூய யாகத்தின் முடிவில் பாதி பொன்மேனி படைத்த கீரி ஒன்று வந்து தியாகம் நிறைந்த ஒரு எளிய அந்தணக் குடும் பத்தினரின் விருந்து ஓம்புதல் என்கிற அன் றாட வாழ்க்கைச் செயல் ஒன்றுக்கு யுதிஷ்டிர ரின் திரிலோக பிரசித்திபெற்ற, பொருள் செலவுமிக்க ராஜசூய யாகம் நிகராகாது

என்று நிரூபித்துக் காட்டியது. ஆசை, சுயநலம் இல்லாவிட்டால் எல்லாம் யக்ஞங்கள் ஆகி விடுகின்றன. தேவயக்ஞம், ரிஷியக்ஞம், பிதுர் யக்ஞம், நரயக்ஞம், பூதயக்ஞம் என்று பஞ்ச மகா யக்ஞங்களை மனிதன் அன்றாடம் தன் வாழ்வில் செய்தாகவேண்டும் என்று சாஸ் திரங்கள் நியமித்திருக்கின்றன. நாம் தினம் செய்கிற, செய்ய வேண்டிய கடவுள் வழி பாடு, ஞான நூல் வாசித்தல், தாய் தந்தை யருக்குத் தொண்டு செய்தல், மக்கள் சேவை, கால்நடை போன்ற சிற்றுயிர் போஷணம் ஆகிய நித்திய வாழ்க்கைச் செயல்களையே யக்ஞம் என்ற பெயரால் குறிப்பிட்டார்கள். வாழை, தென்னைகளின் எல்லாப் பகுதி களும் உலகுக்குப் பயன்படுகின்றன. அவை உலகிலிருந்து ஏற்றுக்கொள்வது குறைவு. அவை உலகுக்கு வழங்குவதே அதிகம். அவை போன்று நம் வாழ்வும் அமையவேண் டும். 'யக்ஞ கர்மம் தவிர மற்ற கர்மத்தால் உல கம் கட்டுண்கிறது. யக்ஞ கர்மத்தை நன்கு இயற்று. சிருஷ்டி துவக்கத்தில் பிரம்மதேவன் யக்ஞத்தோடே பிரஜைகளைப் படைத்து இதனால் விருத்தியடையுங்கள் என்றார். யக் ஞத்திலிருந்து மழை வருகிறது. யக்ஞத்துக் குப் பிறப்பிடம் கர்மம்'. கீதையின் கருத்துக் களையும் நினைத்துப்பாருங்கள். அன்றாட வாழ்க் கைச் செயல்கள் அனைத்தும் யக்ஞங்கள் ஆகின்றன. இப்புனிதமான சொல்லின் தூய் மையைப் பாதுகாக்கும் முறையில் நாம் வாழ வேண்டும். இறைவனே இவ்வுயிர்கள் அனைத் துமாக வடிவெடுத்திருக்கிறார். இப்படி வடி வெடுத்துள்ள விராட் சொருபத்துக்கு நம் வாழ்வை நைவேத்தியமாகப் படைத்துவிடு தலே யக்ஞம் ஆகும்.

தவம் சிறந்ததா? தானம் சிறந்ததா? என்று யுதிஷ்டிரர் வியாசரிடம் வினவினர். அதற்கு வியாசர் "தர்மபுத்திரா, பூமியில் தானம்தான் சிறந்தது. பொருளைக்கொண்டுதான் தானம் செய்ய வேண்டும். எளிதில் தானத்தைச் செய்ய முடியாது. வருந்தி உழைக்காமல் பொருள் தேட முடியாது. தேடிய பொருளில் உள்ள ஆசையை எளிதில் துறக்க முடியாது. இதற்கு உலக நடைமுறையே சான்று. அலை கடல் ஓடியும், போர்க்களம் புகுந்தும், பிற ருக்கு அடிமை வேலை செய்தும் பொருள்தேட மனிதன் துணிகிறான். இப்படித் தேடிய பொருளைத் தானம் செய்ய யாருக்கும் எளிதில் மனம் வராது. நேரிய வழியில் பொருள் தேடித் தானம் செய்வது மேலானது. இதற்குத் திர வியயக்ஞம் என்று பெயர். அது ஆத்மீகத் தில் பலபடி முன்னேறச் செய்கிறது" என்று சொன்னார். தானத்தினால் சுயநலத்தியாகம், அன்பு, பக்தி வளர்கின்றன. கர்ணன் எத்த னையோ தவறுகள் இழைத்திருந்தும், கெட்ட வர்களுக்குத் துணைநின்றிருந்தும் அவன் எடுத் துக்கொண்ட தான விரதத்தினாலேயே இருள் சேர் இருவினையும் அகன்று மோக்ஷமடைந் தான். அன்னதானம், கல்வி தானம், ஆத்ம ஞான தானம் என்று தானத்தை மூவகையாகப் பிரிக்கலாம். அன்றாட சரீரத்துக்குத் தேவை யானவைகளைத் தானமாக வழங்குதல் அன்ன தானம் ஆகும். அவைகள் அந்த ஜீவனுக்கு நிரந்தரமான நன்மையாக அமையமாட்டா. பசி தாகம் மீண்டும் மீண்டும் வருகின்றன. சரீரத் தேவைகள், வாழ்க்கைத் தேவைகள் உண்டாகிக்கொண்டே இருக்கின்றன. எந்த அரசாங்கமும் இதற்கு நிரந்தர பரிகாரம் செய்ய முடியாது. ஜீவன் தானே இதை நிவர்த்தி செய்துகொள்ளவேண்டும். கல்வி தானம் இடைத்தரமானது என்று சொல்லப் படுகிறது. ஜீவனது அறிவைத் தீட்டி, நம் பிக்கை ஊட்டி, வழிவகைகளைக் காட்டி அவனை வாழ்க்கைக்குத் தகுதி உடையவன் ஆக்கு கிறது. மானுடன் என்கிற பெயருக்குத் தகுந்த வன் ஆக்குகிறது. ஆனாலும் இப்பிரபஞ்ச பந்தபாசங்கள், இன்ப துன்பங்கள், பிறப்பு இறப்பு அவனுக்கு உண்டாகின்றன. அவற்றி லிருந்து விமோசனம் அளிக்கவல்ல ஆத்ம ஞானக்கல்வியே உத்தமமானது, தலையாயது ஆகிறது. பிரபஞ்ச சாகரத்தினின்று கரை யேறியவனுக்கு இன்ப துன்பமில்லை, வாழ்க் கைப் பிரச்னை இல்லை. அவன் முக்தி பெற் றவன் ஆகிறான். இது ஜீவனுக்குச் செய் கிற தலையாய, உத்தமமான நன்மை அல் லவா? பஞ்சமகாயக்ஞங்களில் ஒன்றாகிய நரயக்ஞத்தின் விசேஷ விளக்கம் போன்று தானம் அமைகிறது. இதற்குத் தபோயக்ஞம், யோகயக்ஞம், ஞானயக்ஞம் என்றும் பெயர்.

ஆகையால் தானம் நம் வாழ்வில் இடம்பெற வேண்டியதாகிறது. பிரதிபலன் எதிர்பாரா மலும், பிறர் அறியாமலும், அடக்கத்துடனும் நன்கு பிரயோஜனப்பட வேண்டும் என்கிற நோக்கத்தோடும் அகங்காரமின்றி ஈஸ்வரார்ப் பணமாகத் தானம் செய்யப்பட வேண்டும்.

ஆலயங்கள் மூலம் இறைவன் பிரசாதமாக அன்னதானம் நடைபெற்றுவர நம் பெரியவர் கள் ஏற்பாடு செய்துள்ளார்கள். இறைவனுக் குப் படைப்பதினால் கொடுக்கின்றவனுக்குக் கொடுக்கிறேன் என்கிற எண்ணமில்லை. உண வைப் பெறுகிறவனுக்கும் இறைவன் பிரசாதம் என்கிற தூய எண்ணம் ஏற்படும்.

நூலகங்கள் மக்களிடையே அறிவை வளர்ப் பதற்கு உதவுகின்றன. அன்ன சத்திரத்துக் குச் செல்பவர்கள் உணவு பெறுவதுபோன்று நூலகங்களுக்குச் செல்பவர்கள் அறிவைப் பெறுகின்றனர். அன்ன சத்திரம் வைத்து நடத் துபவரிடம் பணத்தையோ, உணவுப் பொரு ளையோ கொடுத்தால், அன்னதானம் செய்வ தற்கு அது நிகர்ஆகிறது. நூலகங்களுக்கு நல்ல அறிவைத் தரும் நூல்களையோ, பத்திரிகை களையோ வழங்குவது அறிவுதானம் ஆகிறது. ஆத்மீகக் கல்வியைக் கொடுப்பது ஆத்ம தானம் ஆகிறது. நல்ல அறிவையும் ஆத்மீகக் கருத்துக்களையும் மக்களிடையே பரப்புபவர் கள் ஞானயக்ஞம் செய்தவர்கள் ஆகிறார் கள். அத்தகைய யக்ஞம் நடைபெறுவதற்குப் பொருள் படைத்தவர்கள் உதவுவார்களானால் அவர்களுடைய பொருள் ஞானயக்ஞத் திற்குப் பயன்பட்டதாகிறது. இன்றைக்கு ஆத்மீகக் கருத்துக்கள் மக்களுக்குப் போய்ச் சேர்வதற்குப் பொருள் படைத்தவர்கள் தங் கள் பொருளைச் செலவழிக்க வேண்டும். அது காலத்துக்கு ஏற்ற யக்ஞம் ஆகிறது. மனம் பாழ்பட்டுக் கிடக்கின்ற மக்களுக்கு மனதைத் திருத்தி அமைக்கக்கூடிய கருத்துக்களைத் தருவதற்கு உதவுவது மக்களுக்கு நல்வாழ்வு கொடுப்பதாகிறது. மக்களை வாழ்வாங்கு வாழச் செய்வதற்கு நாம் எவ்விதத்தில் உதவ முடியுமோ அதுவே மேலான உதவி ஆகிறது.

பொதுமக்களுக்கு நல்லறிவைத் தரவேண் டிய நூலகங்களில் நல்ல நூல்களுக்கோ, நல்ல பத்திரிகைகளுக்கோ அரசாங்கம் ஆத ரவு தரவேண்டும். மனதைக் கெடுக்கக்கூடிய துப்பறியும் நாவல்களுக்கும், ஆபாசமான பத் திரிகைகளுக்கும் அரசாங்கம் ஆதரவு தரக் கூடாது. மக்களிடமிருந்து வாங்கிய பணத்தை அரசாங்கம் சரியான முறையில் செலவழிக்க வேண்டும். அப்படி அரசாங்கம் உதவு வதோடு பொருள் படைத்தவர்களும் உதவ வேண்டும். பண்பட்ட மக்கள் உருவாவ தற்குச் சீரிய கருத்துக்கள் மக்களிடையே பரவவேண்டும். அறம் இன்னதென்பதை மாசற்ற மனம் படைத்தவர்களே அறிகிறார்கள். மனன சீலம் உடையவர்கள் முனிகள் அல்லது ரிஷிகள் ஆகிறார்கள். அவர்கள் கூறிய கருத் துக்களை மக்களிடையே பரப்புவது அறத்தை வளர்ப்பது ஆகிறது. சீரிய கருத்துக்களையும், தெய்வீகக் கருத்துக்களையும் கொண்டுள்ள நூல்களும், பத்திரிகைகளும் எவ்வளவுக்கெவ் வளவு மக்களிடையே பரவுகின்றனவோ அவ் வளவுக்கவ்வளவு அறம் நாட்டில் ஓங்கும். நூல கங்களில் அத்தகைய நூல்கள் இடம்பெற வேண்டும். பொருளும் அருள் உள்ளமும் படைத்த மக்கள்தாம் இப்பணியை முன் வந்து செய்ய வேண்டும். அப்படிச் செய்வோமா னால் நாட்டுக்கு நாம் அறப்பணி செய்தவர் களாகிறோம். கோயில் கட்டுவது, பள்ளிக் கூடங்கள் கட்டுவது போன்ற செயல்களுக்குப் பொருளைச் செலவிடுவதை அறப்பணியாகக் கருதுகிறோம். நல்ல நூல்களையும் பத்திரிகை களையும் மக்களிடையே பரப்புவதற்குப் பொரு ளைச் செலவிடுவதும் சிறந்த அறப்பணியாகும்.

மக்களிடையே மனநோய் உள்ளது. அம் மனநோயைப் போக்குவது இன்றைக்கு நாம் செய்யவேண்டிய யக்ஞம் ஆகிறது. மன நோயைப் போக்கும் கருத்துக்களை மக்களி டையே பரப்பப் பொருள்படைத்தவர்களும், அறிவு படைத்தவர்களும் முயல்வார்களாக. முன்பு மக்கள் நலனுக்காக அக்னி மூட்டி அதில் பொருள்களை ஆஹுதியாகப்படைத்தார் கள். இன்றைக்கு மக்கள் மனதைத் திருத்தும் செயல்களில் பொருளை ஆஹுதியாகப்படைக்க வேண்டும் என்பதை அறிந்து செயல்படுவோ மாக. இன்றைய சூழ்நிலையில் சீரிய கருத்துக் களை மக்களிடையே பரப்புவது சிறந்த அறப் பணியும், சீரிய யக்ஞமும் ஆகின்றன.

# வாசுதேவமனன விளக்கம்

( சுவாமி ஸதானந்தர் )

நாம் படிக்க, கற்க, சுவாத்யாயத்துக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய நூல் எத்தகைய தாக இருக்கவேண்டும் என்று ஒரு லக்ஷணம் சொல்லப்பட்டது. ஆத்மார்த்த நூல்களைப் பயில முன்வரும் சாதகன், அதிகாரி எத்தகைய லக்ஷணம் உடையவனுக இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டது. ஒரு விஷயத்தைச் சரியானதா என்று நிர்ணயிப்பதற்கு மூன்று பிரமாணங்கள் சொல்லப்பட்டன. தெரியாத ஒன்றைத் தெரிந்த விஷயங்களைக் கொண்டு அது அப்படித்தான் இருக்க வேண்டும் என்று நிர்ணயிப்பதற்கு இரண்டு வழிகள் சொல்லப்பட்டன. சாஸ்திரம் முடிவாகச் சொல்லும் தீர்மானங்களுக்கு உதாரணமாகப் பல நியாயங்களைச் சொல்லி அது போன்றதே இதுவும் என்று நம்மை நம்பச் செய்கிறது. அதே போன்று இப்பொழுது சிரவணம் என்பது எப்படி இருக்க வேண்டும் என்று ஒரு லக்ஷணம் சொல்லப்படுகிறது. அந்த லக்ஷணம் நல்ல சாஸ்திரம் ஒன்று எடுத்துக்கொண்ட விஷயங்களை எம்முறையில் சாதகனுடைய மனதில் பதிய வைக்கிறது என்பதற்கு ஒரு இலக்கணமாகவும் இருக்கிறது. சம்ஸ்கிருதத்தில் லிங்கம் அல்லது அடையாளம் என்று அது சொல்லப்பட்டிருக்கிறது. சிரவணம் என்பதில் நாமாக நல்ல நூல்களைப் படித்து அதன் விஷயங்களைப் பற்றிச் சிந்திப்பதையும் சேர்த்துக்கொள்ளலாம். ஏட்டுச்சுவடிகூட இல்லாத காலத்தில் கேட்டல் அல்லது சிரவணம் மூலமாகவே கல்வி போதிக்கப்பட்டது. நம் சாஸ்திரம் பொதுமக்களிடையேயும் இப்படித்தான் பரவியிருந்தது. அச்சு யந்திரம் வந்த பிறகு ஏராளமான நூல்கள் வெளிவந்துள்ளன. நாமே நூல்களைப் படித்து அறிந்துகொள்கிற பழக்கம் இருந்து வருகிறது. ஆகையால் சிரவணம் என்பதில் நாமே படிப்பதையும் சிந்திப்பதையும் சேர்த்துக்கொள்ளலாம்.

ஆறு லிங்கங்களாவன: 1. உபக்ரமம்–உபசம்ஹாரம் (ஆரம்பமும் முடிவும் ஒரே விஷயத்தைச் சொல்வது) 2. அப்பியாசம் (பயிற்சி – திருப்பித் திருப்பிச் சொல்லுதல்) 3. அபூர்வதா (வேறு வழியில் தெரியமுடியாது என்பது) 4. பலம் (இதனுல் கிடைக்கக் கூடிய பிரயோஜனம், லாபம், உபயோகம்) 5. அர்த்தவாதம் (இதன் உண்மைகளை, சிறப்புகளை எடுத்துச் சொல்லிப் புகழ்ந்து நம்பச் செய்வது.) 6. உபபத்தி (காரணங்களைச் சொல்லி நம்பச் செய்வது.) இங்ஙனம் ஆறுவிதங்களாலும் ஒரே உயர்ந்த விஷயம் சொல்லப்படும்போது அது சாதகன் மனதில் வலுவாகப் பதியும். எடுத்துக்கொண்ட விஷயமும் சரியானதுதான், அதுவே தீர்மானமானது என்ற நிச்சயமும் உண்டாகிறது. சாந்தோக்கிய உபநிஷதத்தில் ஆருவது அத்தியாயத்தில் ‘ஸத் ஒன்றுதான் முதலில் இருந்தது’ என்று ஆரம்பித்து முடிவில் ‘எல்லாம் இந்த ஸத் சொரூபம்தான். இதுவே ஸத்தியம்’ என்று கூறப்பட்டுள்ளது. எடுத்த எடுப்பில் உண்மையை, தத்துவத்தைச் சொல்லிவிடுகிறார்கள். பிறகு படிப்படியாகக் கேள்விகள், சந்தேகங்கள், ஆக்ஷேபனைகளைத் தாங்களே எழுப்பி அதற்குச் சமாதானங்கள் சொல்லி, முடிவில் அதுவே ஸத்தியம் என்று பூர்த்தி செய்கிறார்கள். உபநிஷதத்தின் தாத்பர்யம் அகண்ட பிரம்மமே ஆகும். இது உபக்ரம–உபஸம்ஹாரம் என்று சொல்லப்படுகிறது.

‘தத்துவமஸி’ என்கிற உபதேசத்தை ஒன்பது தடவை சொல்லியிருப்பது அப்யாசம் என்கிற இரண்டாவது அடையாளமாகும். பகவத்கீதையில் ‘பாரதா, போர் செய்’ என்று கண்ணன் பல தடவை சொல்லியிருக்கிறார். ‘எல்லா வழிகளிலும், எப்படிப் பார்த்தாலும் நீ யுத்தம் செய்ய வேண்டியதே தர்மம். மறைபொருளாகிய ஞானம் உனக்கு இங்ஙனம் போதிக்கப்பட்டது. நீ ஆலோசித்து விரும்பியதைச் செய்’ என்று பகவான் முடிக்கிறார். எதற்காக இவ்வளவும் சொல்லப்பட்டதோ அவ்விஷயம் மீண்டும் மீண்டும் சொல்லப்படுவது இயல்பு. ‘நீ அதுவாக இருக்கிறாய்’ என்கிற பரபோதத்தை, ஆத்மபோதத்தை நம்முன் விழித்தெழ, நிலைபெற்றிருக்கச் செய்வது அப்பியாசம் அல்லது

பயிற்றுவித்தல் எனப்படுகிறது.

பழங்காலத்தில் முனிவர்கள் தூய்மையாக, எளிமையாக வாழ்ந்து, முமுக்ஷுக்களாக இருந்து, இடைவிடாத தவம் இயற்றி ஆத்ம சாக்ஷாத்காரம் அடைந்தார்கள். பின்வரக் கூடிய சந்ததிகளுக்கு உபயோகப்படும் பொருட்டு அவர்களுடைய அனுபவங்கள் நூல் வடிவங்கள் பெற்றன. அவைகள் இன்று சாஸ்திரப் பிரமாணம் எனப்படுகின்றன. நம் கொள்கைகளுக்கு, நாம் நம்பும் உண்மைகளுக்கு ஆதாரமாகத் தக்க சாஸ்திரப் பிரமாணம் காட்டுகிறோம். ஆனால் அவைகள் முனிவர்களின் அனுபவங்களே ஆகும். ஆயினும் அவைகள் நமக்குப் பிரத்யக்ஷம் ஆகாவிட்டால், நம் அனுபவத்துக்கு வராவிட்டால், நாம் நேருக்கு நேர் அவ்வுண்மைகளைக் காணவிட்டால் அவை வெறும் நம்பிக்கைதானே. அதனால் நமக்கு என்ன பிரயோஜனம்? கணக்குப் புத்தகத்தில் குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்றால் லாபம்என்று போட்டிருக்கிறது. எவ்வளவோ கணக்குகள் போட்டுத் தீர்த்துக்கட்டி எவ்வளவோ லாபம் கணக்குக் காட்டுகிறது. அதனால் நமக்கு என்ன பிரயோஜனம்? நாம் நேரடியாக வியாபாரம் செய்து லாபம் அடைந்தால்தான் அந்த லாபம் நமது சொத்து, உடைமை ஆகும். அதே போன்று ஒருகாலத்தில் ஒருவருக்குப் பிரத்யக்ஷப்பிரமாணமாக இருந்தது பின்னால் மற்றொருவனுக்குச் சாஸ்திரப் பிரமாணம் ஆகிறது. அது அவனுக்கு வழிகாட்டும், நம்பிக்கை ஊட்டும். ஆனால் அது நமக்குப் பிரத்யக்ஷ அனுபவம் ஆகாவிட்டால் ஒருபயனும் இல்லை. சாஸ்திரப் பிரமாணங்கள் உண்மையானவையா என்று நமது யுக்தியினால் ஆராயலாம். யுக்திக்கு ஒத்துவருகின்றதற்கு யுக்திப்பிரமாணம் என்று பெயர். அப்படிப் புத்திபூர்வமாக நாம் ஒத்துக் கொண்டாலும் போதாது. கடவுளைப் பற்றிய எல்லா உண்மைகளும், விளக்கங்களும் சரிதான் என்று நாம் ஏற்றுக் கொள்கிறோம். ஆயினும் என்ன? புலி, பாம்புகளைப் பார்த்தால் நமக்குப் பயம் உண்டாகிறது. வயிற்றில் நெருப்பை அள்ளிக் கொட்டியது போன்று உணர்கிறோம். வாய்வறண்டுபோகிறது. சர்வம் வாசுதேவமயம், ஜகத் முழுதும் இறைவனே என்கிற சாஸ்திரப் பிரமாணம், யுக்திப் பிரமாணம் இரண்டும் பயன்படவில்லை. இன்னும் ஏதோ பாக்கியிருக்கிறது. அதுவே பிரத்யக்ஷம், அனுபூதி எனப்படுகிறது. அதை அடைவதற்கே இவ்வளவு பயிற்சி தரப்படுகிறது, நியாயங்கள் சொல்லப்படுகின்றன. இதுவே அபூர்வதா என்கிற மூன்றாவது அடையாளம் எனப்படுகிறது. அனுபவத்தால் அன்றிப் பிரமத்தை அடைய முடியாது. பிரம்மத்தை அடைதலே அபூர்வமானது.

மிகப் பெரிய சக்ரவர்த்தி, மிகப் பெரிய செல்வந்தன், மிகப் பெரியவீரன், மிகப் பெரிய புலவன், மிகப் பெரிய கலைஞன், மிகவும் பலம் வாய்ந்தவன், மிக மிக அழகானவன் இவர்கள் யாவரிலும் அனுபூதிமானான ஞானி, கடவுளைக் கண்ட பக்தன், பரிபூரணமான யோகியே தலைசிறந்தவன். கடவுளை அடைந்த பக்தனோ, ஞானியோ, அனைத்தும் பெற்றவனாகிறான். இனி அவன் கீழ்மை, துன்பம் அடைய மாட்டான். அவன் எவ்வளவு பெரிய பாக்கியவான்! துரியோதனன் யாதவசைன்யம், போர்த் தளவாடங்கள் யாவற்றையும் பெற்றான். அர்ஜுனன் ஆயுதம்எடுக்காத ஸ்ரீகிருஷ்ணனைப் பெற்றான். பீஷ்மரிடம் தான் கண்ணனிடம் தூதுபோன விபரங்களைச் சொல்லி தான் காரியம் கைகூடினவனாக, வெற்றியுடன் திரும்பியுள்ளதாக மகிழ்ச்சியுடன் துரியோதனன் சொன்னான். ஆனால் பீஷ்மரோ அமைதியாக 'கண்ணன் ஆயுதம்வேறு எடுக்க வேண்டுமா? கடவுள் அருளுக்குப் பாத்திரமானவனை உலகில் எந்தச் சக்திதான் என்ன செய்துவிடமுடியும்? கடவுள் அருளுக்குப் புறம்பானவனை உலக சக்திகள் யாவும், உலகப் பொருள்கள், மனிதர்கள் யாவரும் ஒன்று கூடியும் காப்பாற்ற முடியாது. துரியோதனா தர்மமே வெல்லும்' என்று சொன்னார். பாண்டவர்கள் வெற்றி பெற்றார்கள். இன்றும் சன்மார்க்கத்தில் போகிறவர்களுக்கு அவர்களுடைய வாழ்வு முன்மாதிரியாக இருக்கிறது. வாழ்க்கையில் கடவுள் அருளுக்குப் பாத்திரமாவதைவிடப் பெரிய பேறு என்ன இருக்கிறது! முக்த புருஷனைவிடச் சிறந்தவன் யார்? யோகியே அனைத்தும் பெற்றவன் ஆகிறான். இப்படி அனுபூதியின் பலன்களை விளக்கிக்கொண்டு

போவது பலன் என்கிற நான்காவது அடையாளம் ஆகும். இதன் மூலம் சாதகனின் உள்ளத்தில் தானும் அத்தகைய பெரும்பேறு அடைய வேண்டும் என்கிற அவா எழுகிறது.

ஐந்தாவதான அர்த்தவாதம் என்பது ஏழு பிரிவுகள் கொண்டது. அவையாவன: சிருஷ்டி, ஸ்திதி, பிரளயம், பிரவேசம், சம்யமனம், சோதனம், பலன் என்பன ஆகும். தைத்ரீய உபநிஷதத்தில் இப்பிரபஞ்சம் பிரம்மத்திலிருந்து உண்டானது, அதிலேயே நிலைபெற்றிருக்கிறது, அதிலேயே ஒடுங்கிவிடுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. மண்ணிலிருந்து உண்டாகி, மண்ணிலேயே இருந்து, அதிலேயே மறைந்து போகும் குடம் முதலிய காரியங்கள் (அதாவது பொருள்கள்) காரணமான, மூலப்பொருளான மண்ணைக் காட்டிலும் வேறானவை அல்ல. அது நமக்குப் பிரத்தியக்ஷமாக விளங்குகிறது. அதே போன்று பிரம்மத்திலிருந்து உண்டாகி, அதிலேயே இருந்து அதிலேயே மறைந்துபோகும் சகல ஜீவராசிகளும், இப்பிரபஞ்சமும் பிரம்மமே, பிரம்ம ஸ்வரூபமே என்று தீர்மானிக்கலாம். இதைச் சிருஷ்டி, ஸ்திதி, பிரளயம் என்கிற மூன்றுவித அர்த்தவாதங்கள் என்கிறார்கள். 'தலை உச்சியில் துவாரம் செய்துகொண்டு அந்த வழியாக உள்ளே பிரவேசித்தது.' 'பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து உள்ளே பிரவேசித்தது.' 'இந்த ஜீவாத்ம ரூபமாக உள்ளே நுழைந்து நாம ரூபங்களை விளங்கச் செய்வேன்.' இந்த உபநிஷத் வாக்கியங்கள் பிரம்மமே ஜீவ ஸ்வரூபமாகப் பிரபஞ்சத்தின் உள்ளே நுழைந்திருப்பதாகக் கூறுகின்றன. அதாவது பிரம்மமே ஜீவனாகவும் பிரபஞ்சமாகவும் வடிவெடுத்திருக்கிறது என்பது பொருள். வெளியில் உள்ள மனிதன் வீட்டிற்குள் நுழைந்த போதும் அவன் எப்படி வேறு மனிதன் ஆகவில்லையோ, அதுபோலவே பிரம்மமும் ஜீவனும் ஒன்றுதான் என்பது தீர்மானம். இந்த நிருபணத்திற்குப் பிரவேசம் என்று பெயர். அந்தராத்மா அமிர்தசொருபமானது; அதாவது அழியாப் பொருள், இனிமையான பொருள். இந்தச் சுருதி வாக்கியத்தால் ஜீவாத்மா பரமாத்மா இருவரும் ஒருவரே என்று நிரூபிக்கப்படுகிறது. இந்த ருசு சம்யமனம் என்று சொல்லப்படுகிறது.

அடுத்தது சோதனம். இது பதார்த்த சோதனம் என்றும் சொல்லப்படும். 'தத் துவம் அஸி' என்கிற மகாவாக்கியத்தை எடுத்துக்கொள்வோம். முதல் பதம் தத். இந்தப் பதத்தின் அர்த்தம் ஈசுவரன், பரமாத்மா. இரண்டாவது பதம் துவம். இந்தப் பதத்தின் அர்த்தம் நீ, ஜீவன். தத் பதார்த்தமான ஈசுவரனையும், துவம் பதார்த்தமான ஜீவனையும்பற்றி நமது வியாக்கியான நூல்களில் மிக விரிவாக விளக்கப்படுகின்றன. விரிவாக ஆராய்ந்து, பரிசோதனை செய்து இரண்டும் ஒன்றுதான் என்று நிரூபிக்கிறார்கள். தீர்க்கமாக விசாரணை செய்து குற்றவாளியைச் சரியாகக் கண்டுபிடிக்கிறோம். கைரேகை, ரத்தக்கறை, மோப்பம் இத்தியாதி அடையாளங்களைக்கொண்டு இன்னார்தாம் குற்றவாளி என்று நிர்ணயிக்கிறோம், ருசுப்படுத்துகிறோம். ரத்த சேமிப்பு நிலையத்தில் யார் ரத்தத்தை எடுத்தாலும் அதைப் பரிசோதித்து, இனம் பிரித்து, அந்தந்த வகையுடன் சேர்த்து வைக்கிறார்கள். யுத்தத்தில், விபத்தில் பெருவாரியாக ரத்தத்தை இழந்தவனைக் காப்பாற்ற அவன் ரத்தத்தைப் பரிசோதித்து அதே இன ரத்தத்தை அவன் உடம்பில் செலுத்துகிறார்கள். அவன் குணமடைகிறான். பொருட்காட்சிச் சாலையில் அல்லது திருவிழாக் கூட்டத்தில் தவறிப்போன குழந்தையைப் பிரயாசையுடன் தேடிப் பெற்றோர் கடைசியில் சேவா நிலையத்தில் காண்கிறார்கள். குழந்தையும் தாயும் பரிவுடன் கட்டிப் பிடித்துக்கொண்டு ஆனந்தமடைகிறார்கள். குழந்தை தன் தாயையும் தாய் தன் குழந்தையையும் கண்டு கொள்கிறார்கள். பூரணமான விசாரணையினால், துப்பு அறிவதனால், ஆராய்ச்சியினால் ஜீவன் தன் மூலத்தைத் தன் தாய் தந்தையரைக் கண்டுகொள்ளலாம். பரமனும், இழந்த குழந்தையைப் பற்றிச் சதா நினைந்து தவித்துக் கொண்டிருக்கும் பெற்றோர் போன்று, ஜீவனைத் தன்பால் சேர்த்துக் கொள்ள ஆவலுடன் இருக்கிறான். ஹனுமான்—ராமர், ராதை—கிருஷ்ணன் இவர்களைப் பற்றி ஆராய்ந்து பாருங்கள். வடிவத்தில் இரண்டாக, வேறாகத் தோன்றுகிறார்கள். ஆனால் ராமருக்கு அன்னியமாக ஹனுமான்

இல்லை, ஸ்ரீகிருஷ்ணனுக்கு அன்னியமாக ராதை இல்லை. இருவரும் ஒருவரே. ஜீவ வியக்தி தோற்றமே தவிர, நாமரூப பேதமே தவிர ஜீவனும், பரமனும் சொருபத்தில், அடிப்படையில், மனநிலையில், உயிர் நிலையில், தன்மையில் ஒன்றே. ஈருடல் ஓருயிர் என்று சொல்லலாம். ஜீவன் உண்மையில் பரிதாபகரமான, தவிக்கிற, நிராதரவான சிற்றுயிர் அல்லன். அவன் பரமாத்மாவே. இதை ஆராய்ச்சியின் மூலம், அனுபவத்தின் மூலம் அறிகிறோம். பரமன் தன்மைகள் யாவும் ஜீவ சொருபத்தில் மிளிர்கின்றன. மேகக்கூட்டம் கலைந்த பிறகு சூரியன் பிரகாசிப்பது போன்று மாயையினின்று விடுபட்ட அனுபூதிமான்கள், பக்தர்கள், யோகிகள் வாழ்க்கையில் நாம் இவ்விஷயங்களைப் பார்க்கிறோம். இந்த நிருபணம் சோதனம் என்கிற ஆறுவது அர்த்தவாதம் ஆகும். கடைசியாகப் பலன் என்கிற அர்த்தவாதம் வருகிறது. ஆறு லிங்கங்களில் நான்காவதாக முன்பும் பலன் சொல்லப்பட்டது. ‘பிரம்மத்தை அறிந்தவன் எல்லையற்ற நிரதிசய பலனை அடைகிறான்’ ‘அவன் அமிர்தனாக, அழிவற்றவனாக ஆய்விடுகிறான்.’ இத்தகைய சுருதி வாக்கியங்கள் ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானத்திற்கு மோக்ஷமே பலன் என்று கூறுகின்றன. ஜீவனை மோக்ஷமடையச் செய்தலே சுருதிகளின் லக்ஷியம். அதுவே அதன் தாத்பர்யம். ஆக இந்த ஏழு விதமான அர்த்தவாதங்களினால் சாதகனுக்குச் சுருதிகள் உண்மையைத் தெளிவுபடுத்துகின்றன, சாதகனை நம்பச் செய்கின்றன, பக்குவப்படுத்துகின்றன. வேதாந்தத்தின் ரகசியம் இதுவே. மகாவாக்கியங்களின் உண்மைப் பொருள் இதுவே, சுருதிகளின் தாத்பர்யம் இதுவே என்பதை உணர்ந்து கொள்ளலாம். இதுவே உண்மை. தீர்மானமானது. இதுவே சிரவணம் செய்ய வேண்டிய முறை ஆகும். இதற்கு மேல் நுண்மையாக மனதில் ஆராயவேண்டும். அது மனனம் எனப்படுகிறது.

உபபத்தி என்கிற ஆறுவது அடையாளம் கிட்டத்தட்ட அர்த்தவாதம் போன்றது. ஆயினும் அதைத் தனியாகச் சொல்லியிருப்பதற்கு ஒரு காரணம் இருக்கிறது. பரிசோதனைச் சாலையில் உண்மைகளை நிருபிப்பது போன்று அது காரணகாரியங்களுடன் ஆராய்கிறது. ஒருபிடி களிமண்ணை ஆராய்ந்தால் மண்ணைப்பற்றிய அனைத்தும் தெரிந்து விடுகிறது. ஒரு சொட்டுச் சமுத்திர ஜலத்தை ஆராய்ந்தால் சமுத்திர ஜலம் முழுவதையும் பற்றிய உண்மை தெரிகிறது. ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கையைப் பதம் பார்த்தால் போதும். அதே போன்று பிரம்மத்தையும் அறியமுடியும் என்கிற ருசு உபபத்தி என்கிற ஆறுவது அடையாளம் ஆகும். தன்னை அறிந்தால் தலைவனை அறியலாம். நான் யார் என்கிற ஆராய்ச்சி வேதாந்தத்தில் பிரசித்தமானது. நான் இவ்வுடல் அல்லன், மனம் அல்லன், புத்தி அல்லன், பிரக்ஞையே நான், ஆத்மாவே நான் என்று நிருபணம் ஆகிறது. இந்த ஆத்மா எத்தனை? ஒவ்வொரு ஜீவனுக்கும் வேறு வேறு தனித்தனி ஆத்மாக்கள் இருக்கின்றனவா? என்று ஆராய்ந்து ஜீவ பிரம்ம ஐக்கியம், ஏகத்வம், ஸ்தாபனம் செய்யப்படுகிறது. சிரவணத்தால் கிடைக்க வேண்டிய பலன் இதுவே.

உலகில் சேனாதிபதியால் ஏவப்பட்டுச் சைன்யம் யுத்தம் செய்து வெற்றி பெறுகிறது. ஆனால் ராஜா தான் ஒரு காரியமும் செய்யாத போதிலும் ‘நான் ஜெயித்தேன்’ என்று சொல்கிறான். இதுபோலவே ராக துவேஷங்களினால் தூண்டப்பட்டு மனம் வாக்கு சரீரம் என்கிற மூன்று கரணங்களும் புண்ணியம் பாபம் மிச்ரம் (இரண்டும் கலந்தது) என்னும் மூன்று விதக் கர்மாக்களைச் செய்கின்றன. இதில் ஆத்மாவுக்கு ஒருவிதமான சம்பந்தமும் இல்லை. மேலே விளக்கப்பட்ட நிருபணங்களிலிருந்து ஆத்மாவின் யதார்த்தநிலை, நிஜ சொருபம் நமக்கு விளங்குகிறதல்லவா! அக்ஞானத்தால் ராகதுவேஷங்களில் உள்ள செய்விக்கும் தன்மையையும் கரணங்களில் உள்ள செய்யும் தன்மையையும் தன்னிடத்தில் ஏற்றிக்கொண்டு ‘நான் செய்கிறேன்’ என்று அக்ஞானத்திலிருக்கும் ஜீவன் அபிமானம் கொள்கிறான். உண்மையில் ஆத்மாவுக்குச் செய்யும் தன்மையோ, செய்விக்கும் தன்மையோ இல்லை என்பதைத் தீர்மானமாகத் தெளிவுபட அறிந்து கொள்பவனே ஜீவன் முக்தன். இதுவே தீர்மானம்.

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

**முன்னுரை**

உலகத்தில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட மொழிகள் வழங்கி வருவதாக மொழிநூல் அறிஞர்கள் கூறுகின்றார்கள். அம்மொழி களிலே சில மொழிகளை இன்ன காலத்தில் தோன்றின என்று கூறிவிட முடியும். சில மொழிகளை இன்ன காலத்தில் தோன்றின என்று சொல்லிவிட முடியாது. காலம் வரை யறை செய்து சொல்ல முடியாத, பழைமையும், சிறப்பும் வாய்ந்த மொழிகளை "உயர் தனிச் செம்மொழிகள்" [Classical Languages] என்று மொழிநூல் வல்லுநர்கள் கூறுவார்கள்.

தமிழ்மொழி தொன்மையும் பெருமையும் வாய்ந்தது. இன்ன காலத்தில் தமிழ்மொழி தோற்றம் பெற்றது எனச் சொல்வதற்கு இல்லை. தமிழில் தொன்மையும் பெருமையும் பொருந்திய இலக்கியங்கள் திகழ்கின்றன. "சங்க இலக்கியங்கள்" என்ற தொகுதி நூல் கள் உண்டு. இவை பழைமையானவை. சங்க காலத்தில் இயற்றப் பெற்ற பாடல்களும் இத் தொகுதியில் உண்டு; சங்க காலத்திற்கு முன்பே பாடப்பெற்ற பாடல்களும் உண்டு.

இந்து சமயம் தொன்மையானது. சமண சமயம், புத்தசமயம் ஆகிய சமயங்களும் இந் நாட்டில் தோன்றிய சமயங்கள் ஆகும்.

உலகத்தில் உள்ள தத்துவ நூல்கள் பல வற்றிலும், உலகத்தில் வழங்குகின்ற சமயங் கள் பலவற்றிலும் இந்து சமய உண்மை வடி வங்களையும், சாயல்களையும் காணலாம். அவ் வாறே சங்க இலக்கியங்களிலும் இந்து சமயக் கருத்துக்கள் அமைந்திருப்பதைக் காணலாம். சங்க இலக்கியங்களில் இந்துசமயக் கருத்துக் கள் பரவிக் கிடப்பதுடன், உயிர் என்று சொல்லக்கூடிய ஆன்மா, பிரபஞ்சம் ஆகியவை பற்றியும், கடவுளைப் பற்றியும் பல செய்திகள் சொல்லப்படுகின்றன.

**சங்க இலக்கியங்கள்**

சங்க இலக்கியங்கள் என்று சொன்னோம். சங்க இலக்கியங்கள் யாவை? எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரண்டு தொகுதி நூல் களும் சங்க இலக்கியங்கள் என ஆன்றோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. 1. நற் றிணை 2. குறுந்தொகை 3. ஐங்குறுநூறு 4. பதிற்றுப்பத்து 5. பரிபாடல் 6. கலித் தொகை 7. அகநானூறு 8. புறநானூறு ஆகிய எட்டும் எட்டுத்தொகை நூல்கள் ஆகும்.

1. திருமுருகாற்றுப்படை 2. பொருநர் ஆற் றுப்படை 3. சிறுபாணாற்றுப்படை 4. பெரும் பாணாற்றுப்படை 5. முல்லைப்பாட்டு 6. மது ரைக் காஞ்சி 7. நெடுநல்வாடை 8. குறிஞ் சிப்பாட்டு 9. பட்டினப்பாலை 10. மலைபடு கடாம் ஆகிய பத்தும் பத்துப்பாட்டு நூல் கள் ஆகும்.

இவற்றில் சமயக் கருத்துக்கள் எம்முறை யிலே அமைந்துள்ளன என்பதை அறிவதற்கு முன்னால், முதலில், இந்து சமயம் எது என் பதை நாம் எவ்வாறு உறுதிப் படுத்திக் கொள்ளலாம்? இந்து சமயம் என்று நாம் எச் சமயத்தைச் சொல்லுகின்றோம்? இவற்றிற் கான விடை காண்டல் வேண்டும்.

**இந்து மதம்**

"இந்திய மதங்களை இரு பெரும் பிரிவுகளா கப் பிரிக்கலாம். ஒன்று, வேத வாக்கியங் களைப் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளுவது ; மற்றொன்று, வேத வாக்கியங்களைப் பிரமாண மாகஏற்றுக்கொள்ளாதது. வேத உபநிடதங்க ளைப் பிரமாணமாகஏற்றுக்கொள்ளும் பிரிவுகள் சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், மீமாம்சை, வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய பலவும் அடங்கும் ......" என இந்திய மதங் களைப் பற்றிச் சொல்லப்படுகிறது.

வேதங்கள், உபநிடதங்கள் ஆகிய இரண் டையும் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளும் சம யங்களுக்குள்ளேயும் கொள்கை வேறுபாடுகள் இருக்கலாம். ஆயினும், இச்சமயங்கள் அனைத்தும், "வேத உபநிடதங்களைப் பிர மாணமாக ஏற்றுக்கொள்ளுகின்றன" என்ற பொதுவான கருத்தின் கீழ் இணைந்து வரு கின்றன.

எனவே, வேதஉபநிடதங்களைப் பிரமாண மாக ஏற்றுக்கொள்ளும் சமயம் இந்து சமயம் என்ற முடிவுக்கு நாம் வரலாம்.

" இந்துக்கள் வைதிகர் ; அதாவது வேதத்தைப் பிரமாணமாக ஏற்போர்......" என்ற ஒரு கருத்துச் சொல்லப்படுகிறது. எனவே இதிலிருந்து இந்து மதம் எது ? என்பதையும், இந்துக்கள் என்பவர்கள் யார் ? என்பதையும் அறிந்து கொள்ளலாம்.

**இந்து மதத்தின் உட்பிரிவுகள்**

பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், பைரவம், ஐக்கியவாத சைவம் என்னும் அகப்புறச் சமயங்கள் ஆறும் இந்து சமயங்களே ஆகும்.

சிவனை முழுமுதற்கடவுளாகக் கொண்ட சமயம் சைவ சமயம். திருமாலை(விஷ்ணுவை) முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவ சமயம். சக்தியை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம் சாக்தம். கணபதியை முழுமுதற் கடவுளாகக் கொண்டது காணபத்தியம். குமரனை (முருகன்) முழுமுதற் கடவுளாகக் கொண்டது கௌமாரம். சூரியனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது சௌரமதம்.

சிவ வழிபாட்டையும், விஷ்ணு வழிபாட்டையும் இந்தியா முழுமையும் காணலாம். திருமாலாகிய கிருஷ்ண வழிபாட்டை ராஜஸ்தானத்திலும், உத்தரப்பிரதேசத்திலும் சிறப்பாகக் காணலாம். சக்தி வழிபாட்டை வங்காளத்தில் சிறப்பாகக் காணலாம். கணபதி வழிபாட்டை மகாராஷ்டிரத்தில் மிகுதியும் காணலாம். குமர (முருக) வழிபாட்டைத் தமிழ்நாட்டில் மிகுதியும் பார்க்கலாம். சூரிய வழிபாட்டை ஒரிஸாவில் மிகுதியாகக் காணலாம். தஞ்சை மாவட்டத்தில் ஆடுதுறை அருகில் சூரியனார் கோயில் என்ற தலம் உள்ளது.

இந்த ஷண்மதங்களும் (ஆறு சமயங்களும்) இந்து சமயத்தின் பிரிவுகளாகத் திகழ்கின்றன.

எனவே, வேதங்கள், உபநிடதங்கள் ஆகியவற்றைப் பிரமாணங்களாக ஏற்றுக்கொள்ளும் எல்லாச் சமயங்களும் இந்து சமயங்கள் ஆகின்றன. இவற்றை எல்லாம் உள்ளடக்கிய ஒரு பெரும் சமயமே இந்து சமயம் ஆகும்.

இந்து சமயம் என்றால் எதைக் குறிக்கிறது என்பதற்குச் சில ஆதாரங்களைப் பார்த்தோம்.

நான்கு வேதங்கள், உபநிடதங்கள், ஆறு தரிசனங்கள், பாரதம், இராமாயணம் ஆகிய இதிகாசங்கள், பதினெட்டுப் புராணங்கள் ஆகியவற்றுள் இந்து சமயக் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன.

**சங்க இலக்கியங்களுள் இந்து சமயக் கருத்துக்கள் நிலை பெற்ற விதம்**

தொன்மையான, முற்றிலும் தனித் தன்மை வாய்ந்த சங்க இலக்கியங்களுள் இந்து சமயக் கருத்துக்கள் எவ்வாறு கால்கொண்டன?

(1) பழைமை (2) வியாபித்து நிற்கும் இயல்பு ஆகிய காரணங்களால் இந்து சமயக் கருத்துக்கள் சங்க இலக்கியங்களுள் கால்கொள்ளத் தொடங்கின.

**1. பழைமை**

இந்து சமயம் தவிர, ஏனைய சமயங்கள் எப்போது தோன்றின என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் உள்ளன. ஆனால், இந்து சமயம் எப்பொழுது தோன்றியது என்று வரையறை செய்து உறுதியாகக் கூறமுடியவில்லை.

பிற சமயங்களைத் தோற்றுவித்தவர்கள் யார் யார் எனக் கூறிவிட முடியும். தோற்றுவித்தவர்களின் பெயர்களாலேயே அம்மதங்கள் வழங்கப்படுகின்றன. ஆனால் இந்து மதத்தைத் தோற்றுவித்தவர் யார்? என்று சொல்லிவிட முடியாது. சரி, உண்டாக்கியவர் பெயரால் வழங்கினால் கூட, அதை வைத்துக் கொண்டு, இந்து சமயம் இன்னாரால் தோற்றுவிக்கப்பட்டது என்று சொல்ல முடியும். அப்படியும் இல்லை.

எனவே, "இந்து சமயம் என்பது பொதுப் பெயர்; இதன் உட்பிரிவுகள் சைவம், வைணவம் என்று கடவுள் பெயரால் அழைக்கப்படுகின்றன. பிற சமயங்கள் தோன்றுவதற்கு முன்பே, இந்து சமயம் மட்டும் இருந்தமையால் அதற்குத் தனிச் சிறப்புப் பெயர் அமையவில்லை" என்கிறார் பெரியவர் ஒருவர்.

"மனித குலத்தின் முதற் சிந்தனையில்எழுந்த நூல்கள்" என்று வேதங்களைப் பற்றிச் சொல்லப்படுகிறது. இதிலிருந்து வேதங்களின் பழைமையை அறியலாம். வேதங்களை அடிப்படையாகக் கொண்டது இந்து சமயம் என்று சொல்லப்படுவதால், இந்து சமயத்தின் பழைமையை அறியலாம்.

"வேதமோடு ஆறு அங்கம் ஆயினானை" எனச் சிவபெருமானைத் தேவாரம் கூறுகிறது.

கால நிர்ணயம் செய்ய இயலாத கடவுளுடன் இணைத்து வேதம் சொல்லப்படுகிறது. இந்து மதத்திற்கு அடிப்படை வேதம். காலம் நிர்ணயம் செய்யமுடியாத வேதத்தைப் போல, இந்து சமயத்திற்கும் கால நிர்ணயம் செய்ய இயலாது. அவ்வளவு பழைமையானது.

பழங்காலத்தில் புகழ்பெற்ற மன்னர்களான ஜனகன், அஜாதசத்துரு முதலியவர்கள் வேதாந்த நூல்களைப் படித்து உணர்ந்தார்கள் என்ற செய்தி சதபத பிரமாணம், உபநிடதம் முதலிய நூல்களில் சொல்லப்படுகின்றன.

சுவேதகேது, கௌதமர் ஆகியோர் வேதாந்தப் பாடம் கேட்டுத் தெளிவு பெற்றதாகச் சாந்தோக்கிய உபநிடதம் கூறுகிறது.

வேதம் அனாதி; இந்து சமயமும் அனாதி. வேதங்களின் பழைமையை உணர்த்துகின்ற சான்றுகளில் இருந்து இந்து சமயத்தின் பழைமையையும் நாம் அறிந்து கொள்ளலாம்.

**2. வியாபித்து நிற்கும் தன்மை**

இந்து சமயம் ஒரு காலத்தில் உலகம் முழுவதும் வியாபகமாய் இலங்கியது. அவ்வாறு பரவி இருந்தது என்பதற்கான சிலசான்றுகள் நமக்குக் கிடைத்துள்ளன. நேரடியாகவே அறிந்துகொள்ளும் முறையில் சில ஆதாரங்கள் கிடைத்துள்ளன. யூகத்தின் (inference) அடிப்படையில் புரிந்துகொள்ள உதவும் சில சான்றுகள் கிடைத்துள்ளன.

"இப்பொழுது சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் முன்பு இருந்த ஒரு பிரதேசத்தைப் பெரிய இந்தியா (Greater India) என்று சொல்லுகிறார்கள்; உலகம் முழுவதும் இந்தியாவாக இருந்தது என்று நான் நினைக்கிறேன்" என்கிறார் அறிஞர் ஒருவர்.

"அமெரிக்காவில் கொலரடோ ஆற்றின் கரையில் அநேக கோவில்களையும், சிவலிங்கங்களையும் அமெரிக்கத் தொல் பொருள் ஆய்வுத் துறையினர் கண்டறிந்துள்ளனர்" என்னும் கருத்தும் சொல்லப்படுகின்றது.

ஜாவா—போர்னியோத்தீவில் இந்து சமயத் தொடர்பான கோவில்களையும், இந்து கலாச்சாரச் சின்னங்களையும் கண்டறிந்துள்ளனர்.

இப்பொழுது இந்துமகா சமுத்திரம் இருக்கும் இடம் — கடல் பகுதி — குமரிக்கண்டம் என்னும் பெயர் பெற்றிருந்தது. அப்பகுதியில் பஃறுளியாறு என்னும் ஆறு ஓடிற்று. அவ் ஆற்றங்கரையில் முதல் தமிழ்ச் சங்கம் இருந்தது. அச்சங்கத்தில் 549 புலவர் பெருமக்கள் உறுப்பினராக இருந்தனர். இச்சங்கத்தின் தலைவர் சிவபெருமான்.

குமரிக்கண்டத்தில் நெற்றிக்கண்ணை உடைய மாந்தரைக் குறிக்கும் உருவச்சிலைகள் கிடைத்துள்ளன.

ஆஸ்திரேலிய பழங்குடி மக்களின் நடனத்தைக் காட்டுகின்ற படம் ஒன்றின் கீழே "சிவ நடனம்" (Siva Dance) என்று எழுதப்பட்டுள்ளது. நடனவேடம் புனைந்திருப்பவரின் நெற்றியில் மூன்றாவது கண் தீட்டப்பட்டுள்ளது.

ஜாவாத்தீவில் கட்டப்பெற்றிருக்கும் "பிரம்பானன்" என்ற கோயில் சைவ சித்தாந்தத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட கோயில் என்கிறார்கள். அதே ஜாவாத்தீவில், "தியங்" என்ற சமவெளியில் கட்டப்பெற்ற பல கோயில்களும், "பனத்தரான்" என்னும் இடத்தில் அமைந்துள்ள கோயில்களும் இந்து சமயத்தை அடிப்படையாகக் கொண்டவை. அங்கே அகத்தியர், கணபதி ஆகியோருடைய உருவச்சிலைகள் உள்ளன.

ஜாவாத்தீவின் அருகில் உள்ள பாலித் தீவிலும் இந்து சமயமே அடிப்படையாகக்கால் கொண்டது.

மலேசியாவில் பல இடங்களில் இந்து சமயக் கடவுள்களின் உருவங்களைக் காணலாம்.

வியட்னும் நாட்டில், துரான் என்ற இடத்தில் அமைந்துள்ள தொல் பொருட்காட்சிச் சாலையில் அழகிய நந்தி வடிவங்கள் காணப்படுகின்றன. வியட்னும் நாட்டில் பல இடங்களில் சிவலிங்கம் அமைந்த கோயில்கள் உள்ளன.

கம்போடியா நாட்டில், பழைய கட்டடச் சுவர்கள் சிலவற்றில் மகாபாரதம், இராமாயணம் ஆகிய இதிகாசங்களைப் பற்றிய ஓவியக் காட்சிகள் வரையப்பட்டுள்ளன.

தாய்லாந்து நாட்டில் இந்து சமயத்தவர் என்ற சிலர் வாழ்கின்றனர். இவர்கள் தங்களுடைய பழைய ஏட்டுச் சுவடிகளில் இருந்து, "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியை" என்னும் திருவெம்பாவைப் பாடலைப் பாடுகின்ற வியப்பைக் காணலாம்.

# உண்மையான வைஷ்ணவன் யார்?

(சுவாமி துருவானந்தர்)

[230ஆம் பக்கத் தொடர்ச்சி]

எவனை மோகமும், மாயையும் அணுகாதோ, எவன் மனத்திலே திட வைராக்கியம் குடி கொண்டிருக்குமோ, எவன் வாய் ராம நாமத்தையே ஓதிக்கொண்டிருக்குமோ, எவன் பேராசையும், கபடமும், கோபமும் இல்லாத வனே அவனே உண்மையான வைஷ்ணவன். அவனைத் தரிசிப்பவர்கள் இறையருளுக்குப் பாத்திரமாகிறார்கள்.

காற்றினிலே ஒரு கீதம் தவழ்ந்து வந்தது. ஆனால் அந்தப் பாடலைக் கேட்கக் கூடிய நிலையில் மனநிலை சரியில்லை. ஏன்? மண்டையைப் பிளக்கும் வெயிலிலே நடந்து வந்ததால் உடலும், மனமும் ஓய்ந்து போன நிலையில் இருந்தன. அந்தப் பாடல் இசையைவிட கருத்து ஆழம் பொருந்தியதாய் இருக்கவே புதிய அந்தப் பாடலை வருவோர் போவோர் அனைவரும் கேட்டு ரசித்தனர்.

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்
ளோரும் முடிவில் ஒரு
பிடி சாம்பராய் வெந்து மண்ணாவ
துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்
லால் பொன்னின் அம்பலவர்
அடி சார்ந்து நாம் உய்ய வேண்டுமென்றே
அறிவார் இல்லையே.

எங்கிருந்து இந்தப் பாடல் ஒலி பரப்பப்படுகிறது என்ற எண்ணத்தில் சிறிது நடந்தால் உடலைப் பொசுக்கும் வெயிலில் ஆடவர் கூட்டம் நத்தை நகர்வது போன்று நகர்ந்து கொண்டிருந்தது. அவர்களைக் கண்காணித்துக் கட்டுப்படுத்தி வைத்தனர் காவலர் சிலர். அவர்கள் கரங்களில் திகழ்ந்த தடிகளும் சிலரைப் பதம் பார்க்கத் தவறவில்லை. இத்தனை இன்னல்களையும் சகித்துக்கொண்டு என்ன இன்பத்தை அடையப் போகிறார்கள் என்று அக்கூட்டம் செல்லும் பாதையைப் பார்த்தால் அது ஒரு திரையரங்கத்திற்குள் செல்கிறது. ஏராளமான துன்பத்தை அனுபவித்து ஒரு சிறிய இன்பத்தை அடைய விருக்கிறானே இதனை என்னவென்று இயம்புவது என்ற கேள்வி பிறந்தது? மோஹம் என்று விடை வந்தது. ஒவ்வொன்றிலும் வைத்த மோகத்தின் விளைவாகத்தான் ஒவ்வொரு ஜீவனும் படாத துன்பம் அனுபவிக்கிறது.

தாய் ஒருத்தி சிரமப்பட்டு ஒரே ஒரு மகனை நன்கு படிக்க வைத்து உருவாக்குகிறாள். தாய் கிழித்த கோட்டைக்கூடத் தாண்டாத அத்தனயன் தாய் நோய்வாய்ப்பட்டதால் இரவும் பகலும் கண் விழித்துத் தாயைக் கண்காணிக்கிறான். தாயின் வற்புறுத்தலில் மணம் புரிகிறான். புதிதாகவந்த மங்கையின் கூட்டுறவால் மகன் மனம் மாறியமைகிறது. ஐயிரண்டு திங்களாய்ப் பெற்றெடுத்த அன்னையையும் அடித்துத் துன்புறுத்துகிறான். தன்னை உயர்ந்த நிலைக்கு உருவாக்கிய அவ் உத்தமியையும் மிருகம்போன்று நடத்துகிறான். இவ்வளவையும் சகித்துக்கொண்டு அம்மாதரசி தன் மகன்மீது அன்பு காட்ட முயலுகிறாள் என்றால் பெற்ற மனம் பித்து என்பதினாலா? பிள்ளை மேல் கொண்ட மோகத்தாலா? புதிய துணைவியின்சொல்லுக்குச் செவிசாய்த்துப் பல்லாண்டு வளர்த்த தாயையும் புறக்கணிக்கக் காரணம் மனைவியின்மேல் வைத்தமோகத்தினால்தானே! மோகம் தலையெடுக்கிறபொழுது விவேகம் போய்விடுகிறது. எது செய்யத் தகுந்தது? எது செய்யத்தகாதது? என்ற நல்லறிவு போய் விடுகிறது. நல்லறிவு போய்விட்டால் எல்லாம் நாசம்தான். மோகத்துக்கு வசப்படாத உயிர்களே இல்லை எனலாம். மோகத்துக்கு எதிரிடையானது விவேகம். மோகத்தால் நெறிபிறழ்ந்த ஜீவர்கள்கூட மறுபடியும் விவேகத்தால் தங்கள் கட்டுண்ட மோஹ வலையை அறுத்தெறிந்து முக்தியாம் கரை சேருகிறார்கள். மோகம் என்பது ஒருவகைப் பற்று. இதைச் சரியான விசாரணையின் மூலம்தான் உள்ளத்திலிருந்து அகற்ற முடியும். எல்லாரையும் மோகமடையச் செய்பவன் என்றுவிஷ்ணுவுக்கு ஒரு பெயர் உண்டு. மாயவன் எடுத்த மங்கை வடிவைக் கண்டு சங்கர மகாதேவனே மயங்கினான் என்பது புராண வரலாறு.

அவனே அங்ஙனம் மயங்கினல் மோகத்தின் வலிவை என்னவென்று சொல்வது! காமகாஞ்சனமே மாயை என்று சொல்லப்படுகின்றன. இம்மையில் உடல் மூலம் பெறுகிற சிற்றின் பத்தையும், பணத்தின் மீதுள்ள பற்றுதலையும் ஒழித்தவன் பரமன் அருளுக்குப் பாத்திரமாக முடியும். 'என்னுடைய தெய்விக மாயை கடத்தற்கரியது' என்கிருர் பகவான். 'எவன் என்னைச் சரண்புகுகிருனே அவனே என்னைச் சுலபமாக அடைகிருன்' என்றும் பகவான் பகர்கிருர். பட்டினத்தார் ஏராளமான செல்வங்களுக்கு அதிபதியாயிருந்தார். அரசனுக்கே கடன் தருமளவுக்குச் செல்வம் வாய்க்கப்பெற்றிருந்தார். அவருடைய நல்வினைப் பயனுக அவருடைய புத்திரன் மூலமாக அருள் ஆணை பிறந்தது. 'காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே' என்பது அவ்வாணை. அவர் ஜன்மாந்தரத்தில் செய்த சாதனையெல்லாம் பலன் கொடுக்க வேண்டிய தருணம் வந்தது. இறையருளால் வந்த அந்த வாசகம் அவர் உள்ளத்தில் பெரிய மாறுதலை உண்டு பண்ணியது. உலகச் செல்வம் எல்லாம் நிலையற்றது; அழிந்து போகக் கூடியது. இவ்வுடலை விட்டுப்போகும்போது தன்னேடு வருவது ஒன்றுமில்லை என்ற உண்மை விவேகம் ஒரு பெரிய தெளிவை உண்டு பண்ணியது. அதுவரை சேர்த்திருந்த செல்வம், மாடு, மனை, மக்கள் அனைத்தையும் இறைவன் பொருட்டுத் துறந்து அண்ணலைப்பற்றிய எண்ணத்திலே அலைந்து திரிந்தார். செல்வத்தைத் துறந்து தூயவாழ்க்கையில் பிரவேசித்ததும் காம காஞ்சனத்திலிருந்த மோகம் கழன்றது. காமகாஞ்சனத் தியாகம் செய்தவரே உண்மையான வைஷ்ணவன் என்னும் சொல்லுக்குத் தகுதிவாய்ந்தவராக முடியும்.

ஒருவன் வாழ்நாளெல்லாம் எதை, எண்ணி, பேசி செயலாற்றி வருகின்ருனே அந்தச் சம்ஸ்காரங்கள் மனதில் படிந்து அவன் இறுதிக் காலத்தில் தன் வயமின்றி நீரிலிருந்து எழுகிற குமிழிபோன்று வெளிவருகின்றன. ஒருவன் வாழ்நாளெல்லாம் எத்தகைய எண்ணங்களை எண்ணி வந்தானென்பதை அவன் மரண காலம் விளக்கிக் காட்டி விடுகிறது. இவ்வுலகுக்குள் நாம் வந்துவிட்டோம். என்றைக்காவது ஒரு நாளைக்கு இவ்வுலகைவிட்டு நாம் கட்டாயம் போய்த்தான் ஆக வேண்டும். சாவைப்பற்றிய பேச்சே சிலர்க்குக் கசப்பாகத் தோன்றுகிறது. இவ்வுலகை விட்டுப் போகப் போகிற காலம் வருவதை உணர்ந்து மனிதன் வீண்காலம் போக்குவானு? 'இருப்பது பொய், போவது மெய். ஆகவே மனமே நீ யாருக்கும் தீங்கு செய்ய எண்ணுதே' என்கிருர் பட்டினத்தார். இவ்வுலகுக்குள் வந்து விட்டோம். இனி எங்குப் போவோம் என்பது நமக்குத் தெரியாது. ஆனல் நாம் இங்கு வந்த காரணம் நம்மை ஒழுங்குபடுத்தி, தூயவர்களாக்கிக் குற்றம் குறையில்லாத ஜீவர்களாகத் திருத்தியமைக்க வேண்டும் என்பதே. ஆனல் நாம் அங்ஙனம் செய்வதற்குப் பதிலாக

வந்தவரவை மறந்து — மிக்க
மாதர் பொன்பூமி மயக்கத்தில் ஆழும்

வாழ்வைப் பின்பற்றி வருகிருேம். இம் மயக்கத்திலிருந்து விடுபடுவதே மகத்தான கடமை. தெய்விக இயல்புகள் வாய்க்கப் பெற்றவர்கள் எங்கிருந்தாலும், எந்தக் குலத்தில் பிறந்திருந்தாலும் அவர்களே உலகுக்கு உயர்ந்த சாந்தியை வழங்குகின்றனர். ஏராளமான நூல்களைக் கற்றதனல் மட்டும் ஒருவன் அத்தகைய தெய்விகப்பண்புகளைப் பெற்றுவிட முடியாது. அத்தகைய பண்பாளர்களோடு தானும் இணங்கியிருந்து அந்த உயர்ந்த இயல்புகளைப் பெற வேண்டும். சான்றோர்களுக்கு எங்கேபோவது என்று மதிமயங்க வேண்டுவதில்லை. உண்மையான நாட்டம் நமக்கிருக்குமேயானல் அதை நிறைவேற்றி வைக்க இறைவன் முன்வருகிருன். நல்லவர்கள் ஆவதன் மூலம் நாட்டிலுள்ள பல பிரச்னைகளை ஒரு நல்ல முடிவுக்குக் கொண்டுவர முடியும். நல்லவர்கள் பெருகப் பெருக நல்ல திட்டங்கள் உருவாகும். நாம் நல்லவர்கள் ஆனல் வீட்டுக்கும் நாட்டுக்கும் நலன் விளையும். பண்பாளன் எந்த மதத்தில் இருந்தாலும் மக்களால் நன்கு மதிக்கப் பெறுவான். நல்ல பண்பைப் பெற்றவனே உண்மையான சைவன், கிறிஸ்தவன், முஸல்மான், வைஷ்ணவன் ஆகிருன். உயர்ந்த தெய்விகப் பண்பைப்பெற நாம் பாடுபடுவோமாக. (முற்றும்)

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

[239ஆம் பக்கத் தொடர்ச்சி]

ராமாயணம் தொடர்ந்தது: சீதாதேவியைத் தேடிக்கொண்டு ராமலக்ஷ்மணர் வனத்தில் சஞ்சரித்துக்கொண்டு தெற்கே வருகின்றனர். அனுமனைச் சந்திக்கிறார்கள். அவனுடன் சம்பாஷித்த சிறிது நேரத்திற்குள் அனுமனைப் பற்றி ராமன்,

இல்லாத உலகத் தெங்கும்
ஈங்கிவன் இசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக்
கடலுமே என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற் றன்றே!
யார்கொல் இச்சொல்லின் செல்வன்!
வில்லார் தோள் இளையவீர
விரிஞ்சனோ விடைவல்லானோ

என்று ஆச்சரியப்படுகிறார். அனுமனை உள்ள படி அறிகிறார். ஹனுமன் உள்ளத்தில் பிரிந்த உயிர்த் துணைவரைக் கண்டாற்போன்று பேருவகையும் பேரன்பும் ஊற்றெடுக்கின்றன. பறவைகள் அவர்களுக்கு வெயில் வருத்தம் தோன்றாதவாறு சிறகுகளால் பந்தலிட்டு வருவதையும் பார்க்கிறான். அசரப் பொருள்களும் அவர்களை வணங்குவதேபோல் அவனுக்குத் தோன்றுகிறது. அவர்கள் தர்ம தேவதைகள். அவர்களைக் காணும்போது என் என்பும் நெக்குருகுகின்றது, இயல்பாகவே அவர்கள்பால் அன்பு பெருகுகின்றது. அவரே என் இஷ்டமூர்த்தி, அவருடைய திருவடித் தொண்டன் நான். தான் இதுவரை வாழ்ந்தது வீண்போகவில்லை என்று தீர்மானிக்கிறான், மயிர்சிலிர்க்க நிற்கிறான். ஆனந்த பாஷ்பம் பெருக நிற்கிறான். ஹனுமான் ராமர் சந்திப்பு ஆத்மசாதனத்தில் உத்தம குருசீடர் இணக்கத்திற்கு நல்ல சான்றாகிறது. சுக்கிரீவனைச் சந்தித்து நட்புப் பூணுகிறார்கள். வாலியைக் கொன்றார். வானரர்கள் சீதையைத் தேடினார்கள். ஹனுமான் சீதையைக் கண்டான். லங்காதகனம் பண்ணினான். ராம ராவண யுத்தம் நடந்தது. இராவணன் மாண்டான். அனைவரும் அயோத்தி திரும்பினர். பரதன் அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை. ஸ்ரீ ராம பட்டாபிஷேகம் இனிது நடந்தேறியது.

ராமாயணம் கேட்டுக்கொண்டேபன்னிரண்டு மணிக்குமேல் கோட்டை வந்து சேர்ந்தோம். இதற்கு திருநாராயணபுரம் என்றும் பெயர். நேரே ஆலயத்துக்குச் சென்றோம். பெருமாள் திருநாராயண சுவாமி நின்றகோலம். தாயார் பெயர் யதுகிரி நாயகி. அம்பாள் சந்நிதிக்குப் பக்கம் நாத முனிகள் சந்நிதியும் ஆழ்வார்கள் சந்நிதியும் உள்ளன. ராமானுஜர் சந்நிதி தனியாக உள்ளது. ராமானுஜர் இங்குப் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்துள்ளார். பக்கத்தில் யாதவகிரி என்கிற குன்று ஒன்று உள்ளது. அதன்மேல் கோவில் ஒன்று கம்பீரமாக இருக்கிறது. அங்கு நாங்கள் போகவில்லை. கிருத யுகத்தில் வேதாத்ரி என்றும், திரேதாயுகத்தில் நாராயணாத்ரி என்றும், துவாபர யுகத்தில் யாதவாத்ரி என்றும், கலியுகத்தில் யதிசைலம் என்றும் இம்மலை அழைக்கப்படுகிறது. எவ்வளவு தொன்மையானது! இங்கிருந்து ஒன்றரை மைலில் வேதபுஷ்கரணி என்கிற குளம் உள்ளது. இதில் நீராடி ராமானுஜர் காஷாயம் அணிந்து கொண்டார். இக்கோவில் மூர்த்தியைப் பற்றிய புராண வரலாறு இனிமையானது. இங்குள்ள உற்சவ மூர்த்திக்கு ராமப்பிரியர் என்று பெயர். அதைப் பிரம்மாவிடமிருந்து ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி பெற்றார். ராமருக்குப் பின் குசனிடமும், பின் அவன் மகன் கனகமாலினியிடமும் இருந்தது. துவாபரயுகத்தில் அது ஸ்ரீ கண்ணனிடம் வந்தது. பலராமர் க்ஷேத்திர யாத்திரை செய்தபோது இவ்விடத்தில் விஷ்ணுவைத்தரிசித்தார். ராமப்பிரியர் போலவே அழகாக இருப்பதைக் கிருஷ்ணனிடம் சொன்னார். ஸ்ரீ கிருஷ்ணன் ராமப்பிரியரை எடுத்து வந்து இரண்டு மூர்த்திகளையும் திருநாராயணபுரத்தில் வைத்து ஆராதித்தார். கலியுகத்தில் டில்லி பாதுஷா இம்மூர்த்திகளைக் கவர்ந்து சென்றான். ராமானுஜருக்குத் தம் இருப்பிடத்தைக் காட்டியருளினார் பகவான். ராமானுஜர் பக்தர்களுடன் டில்லி சென்று பாதுஷாவிடம் அம்மூர்த்தியை,

தம் தெய்வத்தைத் தரும்படி கேட்டார். நீ வெளியிலிருந்து கூப்பிடு, வந்தால் உன் பகவானை அழைத்துக்கொண்டு போ என்றான் பாதுஷா. ராமானுஜர் வெளியே இருந்து அழைத்தார். இளவரசியின் அரவணைப்பி லிருந்த ராமப்பிரியர் ஓடி வந்தார். ராமானுஜர் ராமப்பிரியரைத் திருநாராயணபுரத்திற்கு எடுத்து வந்தார். தன் அன்புத்தெய்வத்தைப் பிரிய மனமில்லாத இளவரசி உடன் வந்தாள். பகவானது திருவடியில் தனக்கு இடம் தந் தருளவேண்டும் என்று ராமானுஜரை வேண்டி னாள். உடையவரும் இசைந்தார். திருநாரா யணபுரத்தில் மூலவர் உற்சவர் திருவடிகளில் திருவடி நாச்சியார் அல்லது பீபீ நாச்சியார் என்று அழைக்கப்படும் அம்முகம்மதிய மன் னன் திருமகளைக் காணலாம். கோவிலில் பீபீ நாச்சியார் படம் மாட்டியிருக்கிறார்கள். தாயார் சந்நிதியில் உட்கார்ந்து ஐக்கிய வணக்கம் செய்தோம்.

உலகம் ஒரு கோவில். அதன் கர்ப்பக்கிரஹம் இந்தியா. பாரமார்த்திக லக்ஷியமே அங்கு அமைந்துள்ள மூர்த்தி. அம்மூர்த்தியை என்றும் விளக்கிக்காட்டும் நந்தா விளக்குப் போன்ற வர்கள் பக்தர்கள் ஆசாரியர்கள் ஆகிறார்கள். ராமானுஜரைப் பற்றி நினைக்கும்போது அவரு டைய பேரன்பு, அவருடைய சீடர்களுக்கு அவரிடத்து இருந்த பேரன்பு, அவருடைய காலத்தில் வாழ்ந்த மிகப்பெரிய பக்தர்கள் கூட்டம் எல்லாம் ஞாபகத்துக்கு வருகின்றன. நாராயண மந்திரத்தைச் சொன்னால் ஜன்ம சாபல்யம் ஆகும் என்று தெரிந்து கொண்ட பிறகு அதை அவரால் அடக்கி வைத்திருக்க முடியவில்லை. குரு கட்டளையை மீறி, கோவில் மதில் மேல் நின்று கொண்டு எல்லாரையும் கூவியழைத்து, ஓம் நமோ நாராயண என்று சொல்லுங்கள் என்றார்.

பஸ் 2-30க்குப் புறப்பட்டது. ஒலிபெருக்கி யில் அம்மையார் ஒருவர் பகர்ந்ததாவது: "இருள் நிலையிலிருந்து இறைவன் கருணையால் மருள் நிலைக்கு வந்திருக்கிறோம். மேலும் இறைவன் துணைகொண்டு தெருள் நிலை (தெளிவு) அடைய முயன்று வருகிறோம். அம் முயற்சியின் ஒரு அம்ஸமாக இந்த யாத்திரை அமைந்தது. பக்தி உணர்வுகளை நாம் தினமும் இறைவன் அருளால் பாதுகாப்போமாக. இம் முறையில் மற்றும் சிலர் பேசினர். அதற்கிடை யில் யாத்திரையின் கணக்குகள் முடித்து அவ ரவர் பாக்கிகள் வழங்கப்பட்டன. பெங்களூர் கைலாச ஆச்ரமம் வந்துசேர்ந்தோம். ஆச்ரமத் தில் ஐக்கிய வணக்கம் செய்துவிட்டு இரவு உணவு ஏற்றுக்கொண்டு எட்டுமணிக்குப் பெங் களூர் அன்பர் வீட்டிற்கு வந்தோம். அங்கும் ஐக்கிய வணக்கம் செய்து மங்களம் பாடி யாத்திரையைப் பூர்த்திசெய்தோம். அன்பர் களுக்குப் பிரசாதம் வழங்கப்பட்டது. ஒருவர்க் கொருவர் வணக்கம் செய்து பிரியாவிடை பெற்ற காட்சி காண்பதற்கு அரிதாக இருந் தது. இளையவர்கள் யாவரும் முதியவர்களை வீழ்ந்து வணங்கி விடைபெற்றது அவர்களை உருக்கிவிட்டது. உறவினர்கள் பிரியும்போது கூட இவ்வளவு உருக்கமான காட்சியைக் காண முடியாது. ஆத்மீக உறவு, குருசகோதர பாந் தவ்யம் அத்தகையது. பின்னால் எங்குச் சந்தித் தாலும் இந்த உறவு மேலும் மேலும் பலப்பட்டு வந்ததைப் பார்த்திருக்கிறோம். ஹஸ்தினபுரத் துக்குக் கண்ணன் வந்துவிட்டுத் திரும்பும்போ தெல்லாம் பாண்டவர்கள் எப்படிப் பிரியா விடைகொடுத்து அனுப்பினார்கள் என்பதைப் பாகவதத்தில் படிக்கிறோம். அதே காட்சி இங்குக் காணக்கிடைத்தது. லௌகிகமான விஷயங்களிலிருந்து மனது நழுவி ஆத்மீக விஷயங்களுக்குத் திரும்புகிறது என்பதன் அறிகுறி அது. ஆத்மீக விஷயங்களில் மனம் மேலும் மேலும் இன்பம் காண்பது ஆகுக. ஆத் மீக இன்பங்களையே நாடுவது ஆகுக.

பெங்களூர் அன்பர் வீட்டினின்று ஏற்கனவே டிக்கட் எடுத்து இடம் ரிசர்வ் செய்யப்பட் டிருந்தபடி அவரவர் ஊருக்குப் புறப்பட்டோம். பதினொருநாள் யாத்திரை அந்தர்யோகம் போன்றிருந்தது. பாகவத சப்தாஹம், கீதா யக்ஞம், ராமாயண கதா காலக்ஷேபங்கள் அடங்கிய யாத்திரை பாரமார்த்தமாக இருந் தது. இது ஒரு ஆத்ம சாதனம்தான் என்பதை உணர முடிந்தது. இது ஒரு தபஸ் போன் றிருந்தது. இந்தத் தபஸின் பலன் இறைவ னுக்கே அர்ப்பணம் ஆகுக. உலகமெலாம் இன்புற்றிருப்பதாகுக. இறைவன் திருவடிகள் வாழ்க. (முற்றும்)

# குறிப்புகள்

**பாதயாத்திரை — 6**

இவ்வாண்டு மதுரை மாவட்டத்தில் தேனி என்னும் ஊரில் ஆரம்பித்துக் காமயகவுண்டன்பட்டி என்னும் ஊரில் ஆருவது பாதயாத்திரை முடிவு பெற்றது. மே மாதம் 10ஆம்தேதி புதன்கிழமை மாலை 5-45 மணிக்குப் பாதயாத்திரிகர்கள் அனைவரும் தேனிக்கு வந்து சேர்ந்தனர். தேனியில் ரிஷிகேசம் சிவானந்த சுவாமிகளின் பக்தர் ஒருவர் பாதயாத்திரிகர்கள் அனைவரையும் அன்புடன் வரவேற்றுச் சிற்றுண்டி வழங்கினர். அன்பருடைய இல்லத்தில் பாதயாத்திரிகர்கள் அனைவரும் ஒன்று கூடி ஒருவருக்கொருவர் அறிமுகம் செய்து கொண்டனர். அதன் பிறகு யாத்திரிகர்கள் தங்களுக்குள் அருள் உறவு என்னும் புது உறவை ஏற்படுத்திக்கொண்டனர். வாழ்க்கையில் இது தான் நிலையான உறவு ஆகிறது. அவ்வூரில் அருள்மிகு ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோவில் அமைந்துள்ளது. அங்குப் பாதயாத்திரிகர்கள் அனைவரையும் பூரண கும்பம் கொண்டுவரவேற்றனர். அங்கு ஆலய வழிபாட்டை முடித்துக்கொண்டு அங்குள்ள பொதுமக்களுக்கு 'ஏகலைவ்யன் குருபக்தி' என்னும் பொருள் பற்றிப் பேசப்பட்டது. சொற்பொழிவுக்குப் பின் பாதயாத்திரிகர்கள் அனைவருக்கும் அன்பர் ஒருவர் பாலும் பழமும் பக்தியுடன் வழங்கினர். வரசித்தி விநாயகர் கோவிலில் பஜனையுடன் வழிபாடு செய்து விட்டுப் பாதயாத்திரிகர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்டிருந்த N.R. தியாகராஜன் மக்கள் மன்றத்தை அடைந்தனர். அங்குப் பாதயாத்திரிகர்களுக்கு அவ்வூர் அன்பர் பெரிய விருந்து படைத்தார். பாத யாத்திரிகர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்கு முறையையும், கட்டுப்பாட்டையும் எடுத்துக் கூறிய பின் இரவு 9-45 மணிக்கு அனைவரும் படுக்கைக்குச் சென்றனர்.

மே மாதம் 11ஆம் தேதி வியாழக்கிழமை அதிகாலை 3-30 மணிக்குப் பாதயாத்திரிகர்கள் அனைவரும் எழுந்திருந்து சுறுசுறுப்பே வடிவெடுத்தவர்களாகக் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஸ்நானம் செய்து முடித்து நான்கு மணிக்குத் தேனி மக்கள் மன்றத்தில் வழிபாட்டுக்கு அமர்ந்தனர். அதிகாலை நேரம் வழிபாட்டுக்கு ஏற்ற நேரம். முழு மனதோடு பள்ளியெழுச்சி பாடிச் சிவபுராணம் ஓதி காயத்ரி மந்திரம் ஜபித்துப் பாதயாத்திரிகர்கள் வழிபாட்டை முடித்தனர். பாதயாத்திரிகர்கள் இரண்டு குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். ஒரு குழுவினர் நாமம் சொல்ல அடுத்த குழுவினர் அந்நாமத்தைத் திருப்பிச் சொன்னர்கள்.

சிவாய நம ஓம் சிவாய நம:
சிவாய நம ஓம் நமசிவாய

என்னும் நாம ஜபத்துடன் பாதயாத்திரிகர்கள் தங்கள் முதல் நாள் பாதயாத்திரையை ஆரம்பித்தனர். மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் பாதயாத்திரையின் மூன்று நாட்களிலும் பாதயாத்திரிகர்கள் புனிதப்படுத்தும் செயலில் தீவிரமாக ஈடுபட்டனர். முதல்நாள் பாத யாத்திரையில் நடக்கும் பொழுது வழி முழுதும் "சிவாய நம ஓம் சிவாய நம: சிவாய நம ஓம் நம சிவாய" என்னும் நாமத்தை ஜபம் செய்துகொண்டே நடந்தனர். "யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே" என்னும் பழமொழிக்கேற்பப் பாதயாத்திரிகர்கள் உச்சரித்த மந்திரத்தின் ஓசை முன்னே செல்லப் பாதயாத்திரிகர்கள் பின்னே சென்றனர். கிருஷ்ணனுடைய புல்லாங்குழல் கேட்டு அவ்வோசை வந்த பக்கம் கோபிமார்கள் ஓடியது போன்று நாம ஓசை வந்த பக்கம் மக்கள் ஓடி வந்து காதால் கேட்டுப் பயன் அடைந்தனர். பட்டி தொட்டிகளில் இருந்த பாமர மக்களின் செவிகளில் பகவான் நாம ஓசை விழும்படி செய்த பெருமைக்குரியவர்களாகப் பாதயாத்திரிகர்கள் ஆனர்கள். இறைவன் ஓசை மயமாக இருக்கிருர் என்பதை 'ஓசை ஒலியெல்லாம் ஆனய் நீயே' என்று சான்ரேர்கள் பகர்ந்திருக்கிருர்கள். ஆலயத்தில் உள்ள உற்சவமூர்த்தி, மூலமூர்த்தியின் அருளை எடுத்துச் சென்று மக்களுக்கு வழங்குவது போன்று நாதப் பிரமத்தின் அருளை உற்சவ மூர்த்திகளாகிய பாதயாத்திரிகர்கள் ஊரெலாம் எடுத்து வழங்கினர்கள். தங்களைத் திருத்தி அமைக்கின்ற செயலில் மூன்று நாட்கள் அவர்கள் ஈடுபட்ட வாழ்க்கை

யானது பொதுமக்களிடையே சீர்திருத்தத்தை உண்டுபண்ணியது என்பது அவர்களுக்கே தெரியாது. தங்களை அறியாது மக்களிடையே தெய்வீக உணர்வை வளர்த்த சேவையைப் பாதயாத்திரிகர்கள் செய்தனர்.

தேனியிலிருந்து சிவ நாமத்தை உச்சரித்த வண்ணம் இரண்டுமைல்கள் நடந்து முத்துத் தேவன் பட்டி என்னும் கிராமத்தைப் பாத யாத்திரிகர்கள் அடைந்தனர். அங்கு மக்கள் பூரண கும்பத்துடன் பாதயாத்திரிகர்களை வர வேற்று அங்குள்ள முருகன் சந்நிதிக்கு அழைத் துச் சென்றனர். முருகனைப் பக்தியோடு வழி பட்டு அவ்வூர் மக்களிடம் விடைபெற்றுக் கொண்டு பாதயாத்திரிகர்கள் மேலும் தமது யாத்திரையைத் தொடர்ந்தனர். காலை சுமார் ஏழு மணிக்கு வீரபாண்டி என்னும் ஊரை அடைந்தனர். அன்று அவ்வூர் மாரியம்மன் திருவிழா ஆகும். தாமச பக்தி, ராஜஸ பக்தி, சாத்விக பக்தி என்று பக்தியில் மூன்று பிரிவு கள் உண்டு. அம் மூன்றுவித பக்தி உடையவர் களையும் அவ்விழாவில் காணமுடிந்தது. தாமச பக்தி மிகுந்த கூட்டமே அங்கு ஏராளமாக இருந்தது. தெய்வத்தைச் சாத்விக முறையில் வழிபடுவது எப்படி என்ற முறையைப் பாத யாத்திரிகர்கள் காட்டித்தந்தனர். அவ்வூர் மக்கள் பாதயாத்திரிகர்களுக்கு ஏற்பாடு செய் திருந்த சிற்றுண்டியை அருந்திய பின்னர் அவ்வூர் மக்களுக்கு அறவுரை வழங்கப்பட் டது. பொது இடங்களைத் தூய்மையாக வைத் துக் கொள்ளவேண்டுமென்றும் அமைதியோடு இருந்து வழிபாடு செய்ய வேண்டுமென்றும் அவர்களுக்குப் புகட்டப்பட்டன.

காலை ஒன்பது மணிக்கு நாமாவளியுடன் அவ் வூரிலிருந்து பாதயாத்திரிகர்கள் மேலும் தங் கள் யாத்திரையைத் தொடங்கினர். வழியில் கல்விப்புழை என்னும் இடத்தில் ஓர் அன்பர் சாலையிலேயே பந்தல் போட்டுப் பாதயாத்திரி கர்கள் இளைப்பாற ஏற்பாடு செய்திருந்தார். அந்த நேரத்தில் அவ்வன்பர் அளித்த இளநீர் தேவாமிர்தம்போன்று இருந்தது. பாதயாத் திரிகர்களுக்குத் தம்முடைய உள்ளக்கனிவை அவ்வன்பர் கனிகொடுத்து வெளிப்படுத் தினர். பாதயாத்திரிகர்கள் இளைப்பாறிய இடத்துக்கு அருகில் தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருந்த அன்பர்களையெல்லாம் வர வழைத்துப் பாதயாத்திரிகர்களுக்கு ஏற்பாடு செய்திருந்தபழங்களை அவர்களுக்கும் வழங்கிப் பாதயாத்திரிகர்களும் உண்டு பாதயாத்திரிகர் கள் தங்களை அவர்கள் மயமாகக் கருத அவர் கள் தங்களைப் பாதயாத்திரிகர்கள் மயமாகக் கருத யாவரும் பேரின்பம் அடைந்தனர். வஞ் சகமிலாது உழைத்து வாழ்க்கையில் நீங்கள் வள்ளல்களாக விளங்கவேண்டுமென்று அவ் வுழைப்பாளி மக்களுக்கு உழைப்பின் சிறப்பு எடுத்து ஓதப்பட்டது. பரஸ்பர அன்பு எத்த கையது என்பதைப் பாதயாத்திரிகர்கள் ஒரு வாறு அங்கு அறிந்துகொண்டனர். "ஹரேராம ஹரே ராம" என்னும் மந்திரோபதேசமும் அவர் களுக்குச் செய்யப்பட்டது. பகல் பதினொரு மணிக்கு அங்குள்ள மக்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு பாதயாத்திரிகர்கள் மேலும் தங்கள் யாத்திரையைத் தொடங்கினர். கோட்டூர் என்னும் கிராமத்தைப் பகல் 11-45 மணிக்குப் பாதயாத்திரிகர்கள் அடைந்தனர். ஹரிஜனங்கள் நிறைந்தது அவ்வூர். அவர்கள் மேளதாளத்துடன் பாதயாத்திரிகர்களை வர வேற்றனர். தெய்வநம்பிக்கையின் மூலம் எதை யும் பெற்றுவிடலாம் என்பது கதைமூலம் அவர் களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டது. பாதயாத் திரிகர்களுக்காக ஆயத்தப்படுத்தி யிருந்த மதிய உணவைப் பாதயாத்திரிகர்கள் பகல் ஒருமணிக்கு மகிழ்வுடன் உண்டனர். உணவுக்குப் பின்பு சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டு அங்கிருந்து மாலை 4-15 மணிக்குப் பாதயாத்திரிகர்கள் மேலும் தங்கள் யாத்திரை யைத் தொடர்ந்தார்கள். மாலை 5-15 மணிக்குச் சீலையம்பட்டியை அடைந்தனர். அவ்வூர் விநாய கர்கோவிலில் சிறிது ஐக்கிய வழிபாடு செய்து விட்டு அவ்வூர் அன்பர் பாதயாத்திரிகர்களுக் காக ஆயத்தப்படுத்தி வைத்திருந்த சிற்றுண் டியை அருந்திய பின் மேலும் தங்கள் யாத்திரையைத் துவங்கினர். இரவு 7 மணிக் குப் பாதயாத்திரிகர்கள் சின்னமனூர் என்னும் ஊரை அடைந்தனர். அவ்வூர் மக்கள் பூரண கும்பத்துடன் பாதயாத்திரிகர்களை வர வேற்றுக் காசி விஸ்வநாதர் ஆலயத்துக்கு அழைத்துச் சென்றனர். அங்கு வழிபாட்டை முடித்துக்கொண்டு பூலாநந்தீஸ்வரர் ஆலயத்

துக்குப்பாதயாத்திரிகர்கள் சென்றனர். அங்கும் பாதயாத்திரிகர்களுக்குப் பூரண கும்பத்துடன் வரவேற்பு அளிக்கப்பட்டது. அங்குள்ள பக்த கோடிகளுக்கு "சாலோக்யம், சாமீப்யம், சாரூப்யம், சாயுஜ்ஜியம்" என்னும் நிலைகளைப்பற்றித் தெளிவாக விளக்கிச் சொல்லப்பட்டது. சொற்பொழிவு முடிந்ததும் பாதயாத்திரிகர்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மாணவியர் விடுதிக்குச் சென்று உணவு உண்டு இரவு அங்குத் தங்கினர்.

12—5—78 அதிகாலை 3·30 மணிக்கு எழுந்திருந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு 4 மணிக்குச் சின்னமனூரிலிருந்து பாதயாத்திரிகர்கள்

'ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்
ஆதிசக்தி மஹாசக்தி பராசக்தி ஓம்'

என்ற நாமஜபத்துடன் பாதயாத்திரையைத் தொடர்ந்தனர். வழியில் அப்பிபட்டி என்னும் ஊரிலுள்ள விநாயகர்கோவிலில் பாதயாத்திரிகர்கள் ஐக்கிய வழிபாடுசெய்தனர். வழிபாட்டு முறையைப்பற்றி அவ்வூர் மக்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டது. அவ்வூர் அன்பர் பாதயாத்திரிகர்களுக்கு அளித்த சுக்கு மல்லி மால்ட் பருகிவிட்டு அங்கிருந்து மேலும் பாதயாத்திரையைத் தொடங்கினர். காலை சுமார் 8 மணிக்குக் கன்னிசேர்வைபட்டிஎன்னும் கிராமத்தைப் பாதயாத்திரிகர்கள் அடைந்தனர். அவ்வூர் மக்கள் மிகுந்த உற்சாகத்துடன் தோரணங்களால் ஊரை அலங்கரித்து இன்னிசை வாத்தியங்களுடன் பாதயாத்திரிகர்களை வரவேற்றனர். சுமார் ஐந்நூறுபேர்கள் அடங்கிய கிராம மக்களுக்குப் பக்தியின் மேம்பாட்டைக் கூறி அவர்களுக்கு உண்மையான பக்தி என்ன என்பதைப்பற்றியும் விளக்கப்பட்டது. ஒற்றுமையாக வாழ்வதும், உணர்ச்சியைத் திருத்தி அமைப்பதும், உணர்ச்சியை வெளிப்படுத்தாது அடக்கிவைப்பதும் உண்மையான பக்தியாகுமென்று அவர்களுக்குச் சொல்லப்பட்டன. அமைதியுடன் அவர்கள் இருந்து அறிவுரையை ஏற்றுக்கொண்டனர். பொதுவாகப் பொருள் வசதி படைத்தவர்களுக்கு வழங்கும் மனப்பான்மை இருக்காது. தனமும், பக்தியும் சேர்ந்து அமைவது சிறப்புப் பகுதியாகும். அவ்வூர் அன்பர் பணம் படைத்தவராகவும் நல்ல மனம் படைத்தவராகவும் இருந்தார். தன் நல் இயல்பை வெளிப்படுத்துவதற்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்ததாக அவர் கருதிப் பாதயாத்திரிகர்களை அன்புடனும் பணிவுடனும் வரவேற்று அமுது படைத்தார். அங்கிருந்து காலை சுமார் 9–30 மணிக்குப் புறப்பட்டுப் பாதயாத்திரிகர்கள் நாமஜபத்துடன் நடந்தனர். வழியில் சின்ன ஓமலாபுரம் என்னும் கிராமத்தில் தந்த வரவேற்பை ஏற்றுக்கொண்டு அவ்வூர் மக்களுக்குக் குழந்தைகளை வளர்க்க வேண்டிய முறையை எடுத்துப் புகட்டிவிட்டு மேலும் பாதயாத்திரையைத் தொடங்கினர். மதியம் சுமார் பன்னிரண்டு மணிக்கு ஆனைமலையன்பட்டி என்னும் கிராமத்தைப் பாதயாத்திரிகர்கள் அடைந்தனர். அவ்வூர் மக்களும் அன்புடன் பாதயாத்திரிகர்களை வரவேற்றனர்.

பாரதியாருடைய பாடல் ஒன்றின் பொருளை அவ்வூரில் பாதயாத்திரிகர்கள் நடைமுறைக்குக் கொண்டுவந்தனர். "ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில், இழிவு கொண்ட மனிதர் என்பர் இந்தியாவில் இல்லையே" என்று பாரதியார் முழங்கியுள்ளார். பாதயாத்திரிகர்கள் அவ்வூர் ஹரிஜன சேரியில் உள்ளமக்களோடு இணைந்து அவர்கள் தந்த வரவேற்பை ஏற்று அச்சேரியிலிருந்த சாக்கடையைச் சுத்தம் செய்து அச்சேரி மக்களுக்குத் தூய்மையையும் பக்தியையும் செயல் முறையில் காட்டித் தந்தனர். பாதயாத்திரிகர்கள் சேரியிலுள்ளசாக்கடையை மகிழ்ச்சியோடு ஈசுவரப்பணியாக எண்ணிச் சுத்தம் செய்த செயல் என்றும் மறக்கமுடியாத அளவு சேரி மக்களுடைய உள்ளத்தில் நல்லுணர்வைப் பதிய வைத்தது. சிறிது நேரத்துக்கு அச்சேரியிலிருந்த ஈசுவரக் குழந்தைகளோடு பாதயாத்திரிகர்கள் அளவளாவிப் பணிவிடை செய்தது ஸ்ரீ விவேகானந்தர் கூறிய நர சேவையே நாராயண சேவை என்பதற்குச் செயல்முறை விளக்கமாக இருந்தது. பாதயாத்திரிகர்களுடைய உள்ளம் அச்சேவை செய்வதில் பரமானந்தம் அடைந்தது.

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டு [விட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே"

என்னும் தாயுமானவர் வாக்குக்கு அங்குப்

பாதயாத்திரிகர்கள் அனுபவ விளக்கம் கண்டார்கள். சேவையில் பாதயாத்திரிகர்களுடைய உள்ளம் பரமானந்தம் அடைந்தது போலவே அன்று நன்பகல் அவ்வூர் அன்பர் பாதயாத்திரிகர்களுக்கு வைத்த விருந்தும் பரமானந்தமாக இருந்தது. உணவுக்குப் பிறகு சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு யக்ஞத்தைப் பற்றியும் தவத்தைப் பற்றியும் அவ்வூர் அன்பர்களுக்கு உபந்நியாசம் செய்யப்பட்டது.

மாலை ஐந்து மணிக்கு அங்கிருந்து புறப்பட்டுக் கோகிலாபுரம் என்னும் கிராமத்தில் அளித்த வரவேற்பையும் சிற்றுண்டியையும் ஏற்றுக்கொண்டு இரவு 7-15 மணிக்கு உத்தம பாளையத்தைப் பாதயாத்திரிகர்கள் அடைந்தனர். அவ்வூர் மக்கள் பூர்ண கும்பத்துடன் பாதயாத்திரிகர்களை வரவேற்றனர். அங்குள்ள சிவாலயத்துக்குச் சென்று வழிபாட்டை முடித்துக்கொண்டு அவ்வூர் மக்களுக்கு அருளுரை வழங்கப்பட்டது. அவ்வூர் மக்கள் அளித்த விருந்தை ஏற்றுக்கொண்டு இரவு உத்தம பாளையத்தில் பாதயாத்திரிகர்கள் தங்கினர்.

13-5-78 காலை 3-30 மணிக்கு எழுந்து பெரியாற்றில் ஸ்நானம் செய்துகொண்டு பாதயாத்திரிகர்கள் அனைவரும் அதிகாலை 4-30 மணிக்குப் பாதயாத்திரையைத் தொடங்கினர். அன்று பாதயாத்திரை முழுவதும்

“ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே”

என்ற நாமம் ஜபிக்கப்பட்டது. வழியில் அனுமந்தப்பட்டி கிராம மக்கள் அளித்த வரவேற்பை ஏற்றுக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலில் வழிபாடு செய்து பாதயாத்திரையைத் தொடர்ந்தனர். காலை 6-15 மணிக்குப் புதுப்பட்டி என்னும் கிராமத்தைப் பாதயாத்திரிகர்கள் அடைந்தனர். அவ்வூர் மக்கள் பூர்ண கும்பத்துடன் பக்தி பூர்வமான வரவேற்பு அளித்தனர். அவ்வூரிலுள்ள சந்நாசியப்பன் கோவிலில் வழிபாட்டை முடித்துக்கொண்டு அவ்வூர்மக்கள் ஏற்பாடு செய்திருந்த திருவிளக்குப் பூஜையில் பாதயாத்திரிகர்கள் கலந்துகொண்டனர். பக்தி உணர்வோடு அம்மக்கள் வழிபாட்டில் கலந்துகொண்டனர். அருள் உரை கேட்பதில் அவர்கள் பேரார்வம் கொண்டிருந்தனர். அருள்ஜோதி தெய்வம் என்னை ஆண்டு கொண்ட தெய்வம் என்று தொடங்கும் வள்ளலார் பாடலுக்கு ஆங்கு விளக்கம் சொல்லப்பட்டது. அவர்கள் உள்ளம் ஜோதியில் கலந்தது போன்ற உணர்வுடன் அருள் உரையைக் கேட்டுப் பயன் அடைந்தனர். பாதயாத்திரிகர்கள் அனைவருக்கும் பால் வழங்கினர். அவர்களுடைய வெள்ளை உள்ளத்தை அன்புடன் படைப்பதுபோன்று அவர்கள் பால் வழங்கிய காட்சி அமைந்திருந்தது. அங்கிருந்து காலை ஏழேகால் மணிக்குப் புறப்பட்டு நாமாவளியுடன் பாதயாத்திரை செய்து காலை எட்டேகால் மணிக்குக் கம்பத்தைப் பாதயாத்திரிகர்கள் அடைந்தனர். கம்பத்திலுள்ள ஸ்ரீ காசி விஸ்வநாதர், ஸ்ரீ விசாலாக்ஷி அம்மன், கன்னிகா பரமேஸ்வரி, பெருமாள், சுப்பிரமணியர் ஆகிய சந்நிதிகளில் பூர்ணகும்பத்துடன் பாதயாத்திரிகர்கள் வரவேற்கப்பட்டனர். ஸ்ரீ நந்த கோபால் தம்பிரான் கோமாதா கோவிலுக்குப் பாதயாத்திரிகர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர்.அங்குப் பசுவைத் தெய்வமாக வைத்து வழிபாடு செய்கிறார்கள். அங்குக் கண்ணனுடைய அவதார மகிமையைப்பற்றி எடுத்து விளக்கப்பட்டது.பாதயாத்திரிகர்களுக்குஅங்கு அமைத்திருந்த காலைச்சிற்றுண்டி பேரமிர்தமாகவிருந்தது. பெரிய விருந்தும் படைத்து அவர்களுடைய கனிந்த உள்ளத்தை வெளிப்படுத்துவதற்கு அடையாளமாகப் பாதயாத்திரிகர்கள் அனைவருக்கும் கனிகளும் வழங்கினார்கள். பக்தி நெறியை அவர்களுக்குப் புகட்டி அம்மக்களிடமிருந்த அன்பைப் பெற்ற பாதயாத்திரிகர்கள் காலை சுமார் பத்துமணிக்கு அங்கிருந்து புறப்பட்டுக் காமயகவுண்டன்பட்டியைநோக்கி நடந்தனர். காலை பதினொன்றரை மணிக்குப் பாதயாத்திரிகர்கள் காமயகவுண்டன்பட்டியை அடைந்தனர். அவ்வூர் மக்கள் அளித்த வரவேற்புச் சிறப்பாக இருந்தது.

ராமனுடைய பட்டாபிஷேகத்தை அன்று அயோத்தி மக்கள் ஒவ்வொருவரும் குதூகலமாக வீட்டை அலங்காரம் செய்து கொண்டாடியது போன்று அன்று அவ்வூர் காட்சி அளித்தது. ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் பக்தி உணர்வு ஓங்கியது. தெய்வீக

உணர்வில் அன்று அவ்வூர் மக்கள் மூழ்கியிருந்தனர். கிருஷ்ண சைதன்யர் கூட்டத்துடன் அனைத்து உயிர்களும் ஆனந்தத் தாண்டவ மாடியதுபோன்று அன்று அவ்வூர் மக்கள் பேரன்புமயமாக விருந்தனர். பாதயாத்திரிகர்களுக்கு உணவு அளிப்பதிலும், திட்டம் போட்டுப் பங்குகொண்டு அன்பர்கள் மகிழ்ச்சி அடைந்தனர். அன்று மாலை அவ்வூரிலுள்ள பாட்டையா கோவிலில் ஹரிஜனமக்கள் சுமார் அறுநூறு பேருக்கு உணவும், ஒரு சிலருக்கு உடையும் வழங்கப்பட்டன. அவர்களை 'ஹரே ராம' மந்திரத்தை ஓதும்படி செய்து அவர்களுக்கு நாம ஜபத்தின் மகிமை எடுத்துக் கூறப்பட்டது. பின் அவர்களை ஒழுங்காக அமரச் செய்து உணவு பரிமாறும் வரையில் ஹரே ராம என்ற நாமம் சொல்லும்படி செய்து அவர்களுக்கு உணவு பரிமாறி அவர்களை ஒழுங்குப் பாடாக எழுந்திருக்கும்படி செய்து, அவர்கள் உணவு உண்டபின் அவர்கள் உண்ட இலைகளை எடுத்து, அவ்விடத்தைச் சுத்தம்செய்து நர சேவையே நாராயண சேவையாகப் பாதயாத்திரிகர்கள் செய்தனர். இவ்வாண்டு அறுநூறு மக்களுக்கு உணவு வழங்குவதற்குரிய செலவை ஓர் அன்பர் பேருள்ளம்கொண்டு ஏற்றுக்கொண்டார். ஆண்டுதோறும் உடை வழங்குவதற்கு உதவிவரும் அதே அன்பர் இவ்வாண்டும் ரூ. 1000/- (ரூபாய் ஆயிரம்) கொடுத்து உதவினர். பொருளைப் பாங்கியில் போட்டு வட்டியைப் பெருக்க மக்களுக்குத் தெரியும். ஆனால் ஏழைகளுக்காகப் பொருளை முறையாகச் செலவழித்து அருளைப் பெருக்குவதில் ஈடுபடுகின்ற மக்கள் எத்தனைபேர்?

இவ்வரிய நிகழ்ச்சியுடன் இவ்வாண்டு எங்களுடைய பாதயாத்திரை முடிவுற்றது. பாதயாத்திரையில் புதியதாகச் சேர்ந்துகொண்டவர்கள் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தையும், மனபரிபாகத்தையும் எடுத்துக்கூறி மகிழ்ச்சி அடைந்தனர். மங்களம் பாடிப் பாதயாத்திரையை இனிது முடிவுக்குக் கொண்டு வந்தோம். இவ்வாண்டு பாதயாத்திரையில் அன்னதானம், அறிவுதானம், அருள்தானம் ஆகிய மூன்று தானங்களும் முறையாகச் செய்யப்பட்டன. அறிவுதானம் இவ்வாண்டின் புதிய சிறப்பாகும். நல்லறிவுத் துறையிலே ஏழைகளாகவிருந்த ஆங்காங்குள்ள மக்களுக்குத் தபோவன வெளியீடுகள் அன்பளிப்பாக அளிக்கப்பட்டன. இங்ஙனம் சமுதாய மக்களிடையே உள்ள வறுமைகளைப் போக்குவதற்கு இப் பாதயாத்திரை பெரிதும் பயனுடையதாக இருந்தது. மக்களைப் பக்திமான்களாக ஆக்குவதற்கும், தூய்மையுடையவர்களாக ஆக்குவதற்கும், சேவை மனப்பான்மையுடையவர்களாக ஆக்குவதற்கும் ஆண்டுதோறும் நிகழும் பாதயாத்திரை பயன்பட்டு வருகிறது.

இவ்வாண்டு பாதயாத்திரையில் கலந்துகொண்ட அன்பர்களுக்குச் சபரியாத்திரை செய்யும் அரியவாய்ப்பும் கிடைத்தது. மே மாதம் 15, 16 தேதிகளில் சபரியாத்திரை பாதயாத்திரிகர்களுக்கு மிகச் சிறப்பாக அமைந்தது. சபரிமலை ஐயப்பனைப் பாதயாத்திரிகர்கள் கண்குளிர, மனங்குளிரத் தரிசித்து ஆனந்தமடைந்தனர். பாதயாத்திரிகர்கள் அனைவரும் சபரிமலை ஐயப்பனின் ஆலயத்தின் முன் அமர்ந்து உருக்கத்தோடு ஐக்கிய வழிபாடு செய்து சபரிமலை ஆலயத்தில் மேலும் அருள்நிலை வளர உதவினர்கள். சபரிமலை யாத்திரைக்கு வேண்டிய உதவி செய்து பாதயாத்திரிகர்கள் அனைவருக்கும் எவ்விதக் குறையுமின்றித் தரிசனம் செய்வதற்குக் காமயகவுண்டன்பட்டி அன்பர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். இறைவனை மக்கள் வடிவத்திலும், ஐயப்பன் வடிவத்திலும் தரிசித்துப் பாத யாத்திரிகர்கள் இவ்வாண்டு பேரானந்தம் அடைந்தனர்.

---

## செய்திகள்

### நிகழ்பவை

ஜூன் மாதம் 15ஆம் தேதி குற்றாலம் ஐந்தருவி ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்தில் பருவ அந்தர்யோகம் ஆரம்பித்து நடைபெற்று வருகிறது. ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி முடிய இவ் அந்தர்யோகம் நிகழும். விபரங்களுக்குத் தர்ம சக்கரம் வைகாசி இதழ் அட்டை 2ஆம் பக்கத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்.

ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல மாணவர்கள் ஆடி விடுமுறைக்காக ஆகஸ்டு மாதம் 10ஆம் தேதி மாலை 3 மணிக்கு மேல் அவரவர் ஊர்களுக்குப் புறப்படுவார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம்-மூன்றும் பதிப்பு பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஆறும் பதிப்பு-பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம்-பதினைன்காம் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | |
| பரிபூரணனந்தம் விரிவுரை | ... 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... 3-00 |
| சுகவாரி ஷை | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 3-00 |
| எங்கும் நிறைகின்றபொருள் ஷை | ... 2-50 |
| கருணைகரக்கடவுள் ஷை | ... 2-00 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 1-00 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| ஆத்ம சக்தி | ... 0-75 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்வீக மகிமைகள் | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-30 |
| அருள் விருந்து *1 to 25* ஒவ்வொன்றும் | ... 0-30 |
| The Bhagavad Gita (9th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (with plastic-cover) | ... 4-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 3-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | ... 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-65ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

[ அட்டை இரண்டாம் பக்கத் தொடர்ச்சி ]

## 2. வட்டியில்லாக் கடன் — Call Deposit-Interest Free

அன்பர்கள் தம்மால் இயன்ற தொகையை வட்டியில்லாமல் கடனைத் தந்துவைக்கக் கோருகிறோம். இது ரூ. 100க்குக் குறையாமல் எவ்வளவு பெரிய தொகையாகவும் இருக்கலாம். இத்தொகைகளுக்கு டிபாஸிட் ரசீது முறையே வழங்கப்பெறும். இவைகளைத் திரும்பப் பெறுவதற்குக் கால வரை இல்லை. டிபாஸிட் செய்த மறுநாள் முதல் எப்பொழுது வேண்டுமானாலும் தங்கள் அறிவிப்பு கிடைத்ததும் உடனடியாக இத்தொகை திருப்பித் தரப்பெறும். இத்திட்டத்தில் சேரும் தொகையையும் பாங்கில் டிபாஸிட் செய்து அதினின்று வரும் வட்டியை அரசாங்க வாசகசாலைகளுக்கு இலவசமாக தர்மசக்கரம் அனுப்புவதற்குப் பயன்படுத்துவோம். தங்கள் தொகை பாங்குகளில் டிபாஸிட் செய்யப்பெற்றிருப்பதால் அதினின்று தாங்கள் கேட்கும்பொழுது பாங்கில் வாங்கித் தங்களுக்குத் திருப்பித் தருவதில் சிரமம் ஏதுமில்லை. ஆதலால் தாங்கள் சில செலவுகளை எதிர்பார்த்து இருப்பில் தங்களிடம் வைத்திருக்கும் பணத்தை எங்களிடம் தாற்காலிகமாக வட்டியில்லாக் கடனைத் தந்துவைத்தால் சிறிது காலத்துக்காயினும் அதினின்று கிடைக்கும் பத்துசத வட்டி இந்த ஞானயக்ஞத்துக்குப் பயன்படுகிறது. வட்டி பெறுவதைத் தாங்கள் தியாகம் செய்வதால் வருமான வரிப் பிரச்னைக்கு இடமில்லை. மேலும் சர்க்காருக்கு வரியாகச் சேரவேண்டிய பங்கையும் இந்த நல்ல காரியத்துக்குப் பயன்படுத்துபவர்களாகிறீர்கள்.

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். — குறள்

செல்வம் நிலையற்றது; அழிந்துபோகும் தன்மை உடையது. அத்தகைய நிலையற்ற செல்வத்தை நிலைபேறுடைய நல்ல காரியங்களுக்கு வாய்ப்புக் கிடைக்கும் பொழுதே பயன்படுத்தவேண்டும் என்பது வள்ளுவர் வாக்கு. பொருளை நற்காரியங்களுக்குத் தானமாக மனமுவந்து வழங்குவது திரவிய யக்ஞமாகும். வழங்கும் பொருள் அருள்தாகத்தை வளர்த்து ஆத்ம ஞானம் பெறுதற்குப் பயன்படுத்தப்படுவதால் அதே செயல் ஞானயக்ஞம் ஆகிறது.

தாங்கள் அனுப்பும் தொகையைத் திருச்சியில் மாற்றும்படியாக எந்தப் பாங்கிற்காவது Sri Ramakrishna Tapovanam என்ற பெயருக்கு டிராப்ட் எடுத்து A/c Payee என்று cross செய்து அனுப்பக் கோருகிறோம். டிராப்ட் அனுப்பவேண்டிய விலாசம்: காரியதரிசி, ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, திருச்சிராப்பள்ளி மாவட்டம், 639 115.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.